உ

ஓம்

பரப்பிரஹ்மணேநம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.




| தொகுதி | அக்ஷயஹு கார்த்திகைமீ கஉ | பகுதி |
|---|---|---|
| 12 | 1926ஹு நவம்பர்மீ 16உ | 5 |


## கடவுள் வணக்கம்.

பண்ணே னுனக்கான பூசையொரு வடிவிலே
பாவித் திறைஞ்ச வாங்கே
பார்க்கின்ற மலரூடு நீயே யிருத்தியப்
பனிமல ரெடுக்க மனமும்
நண்ணே னலாமலிரு கைதான் குவிக்கவெனின்
நாணுமென் னுள நிற்றிநீ
நான்கும்பி டும்போ தரைக்கும்பி டாதலால்
நான்பூசை செய்யன் முறையோ
விண்ணே விணுதியாம் பூதமே நாதமே
வேதமே வேதாந்தமே
மேதக்க கேள்வியே கேள்வியாம் பூமிக்குள்
வித்தே யவித்தின் முளையே
கண்ணே கருத்தேயெ னெண்ணே யெழுத்தே
கதிக்கான மோன வடிவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக் கடவுளே. (1)

---

எங்கும் வியாபித் துணர்வா யுனக்கென் னிதயத்துள்ளே
தங்குந் துயரந் தெரியாத வண்ணந் தடைசெய்ததார்
அங்கங் குழைந்துள் ளுருகுமன் பாளர்க் கணைகடந்து
பொங்குங் கருணைக் கடலேசம் பூரண போதத்தனே. (2)

---

வையக மாதர் சுகத்தையும் பொன்னையு மாயைமல
மெய்யையு மெய்யென்று நின்னடியார்தம் விவேகத்தையும்
ஐயமில் வீட்டையு மெய்ந்நூலையும்பொய்ய தாகவெண்ணும்
பொய்யர்தம் நட்பை விடுவதென் றோபரி பூரணமே. (3)

---

# அரும்பொருள் விளக்கம்.

1. இறைவனை வழிபடுதல் ஜீவர்க் கின்றியமையாத கடமை யாயினும் அம் முதல்வனது எங்கும் நிறைந்துள்ள வியாபகத் தன்மையை முன்னிட்டுப் பரதந்திரனுகிய யான் சுதந்தரனுக எண்ணி எவ்வாறு அப்பெருமானை, ஒரு வடிவத்திலேயே ஏகதேசியா யிருப்பனெனக் கொண்டு, அஞ்சலித்தலும் பூசித்தலுங் கூடுமென்று ஆசிரியர் இப்பாடலில் இரங்குகின்றார். இது தற் போதமிழந்து வணங்குதலும் பூசித்தலுமே உசிதம் என்பதை வெளிப்படுத்து கின்றது.

கருமத்திற்குத் தக்கபடி தலைவன் செய்விக்க ஜீவான்மா செய்கின்றது நியதமாதலால், செய்தல் பாதியும் செய்வித்தல் பாதியுமாக ஒரு தொழில் முற்றுப் பெறுதலை நோக்கி 'அரைக்கும்பிடு' என்றார்.

கட்புலனுக்குத் தோன்றும் பொருள்களிலும், மனத்திற்கு விஷயமாகும் பொருள்களிலும் இறைவன் இருத்தலை நோக்கி 'கண்ணே கருத்தே' என் றும், வேதார்த்தங்களின் உண்மையை யுணர்வதற்குத் தருக்கமும் இலக்கண மும் துணைக் கருவியாதல் பற்றி 'எண்ணே யெழுத்தே' என்றும் கூறினர்.

மேதக்க—மேன்மை பொருந்திய.

வித்து—பீஜம்.

2. பரமான்மா சர்வ வியாபியாய் எங்கும் நிறைந்திருப்பது போல ஆன்மாவினிடத்தும் பூரணமாக விருந்தும், ஆணவமலத்தடையால் அந்த வியாபகத்தினுண்மையை ஆன்மா தெரிந்து கொள்வதற்குத் தடையாகவும் ஏற்பட்டுள்ள தென்பதனைக் குறிப்பாற் றெரிவிக்க வேண்டி 'தெரியாத வண் ணம் தடைசெய்ததார்' என்றனர் இப்பாடலில்.

அணை—வரம்பு.

3. இக்கவியில் பெண், பொன், உடல் என்பவை மூன்றும் இம்மையில் ஏகதேச சுகத்தைக் கொடுப்பதற்குக் காரணமாம். அங்ஙன மிருக்க மறு மைக்குச்சிறிதும் பயனற்ற அனித்தியமானவற்றைச் சத்தியமென வெண்ணி வாழ்ந்தேன் என்றார்.

ஐயமில் வீடு—நிரதிசயானந்த முத்தி.

---

# ஆனந்தபோதினி

அக்ஷயஞூ கார்த்திகைமீ கஉ

## புகைவண்டிப் பொறாமை.

தொன்றுதொட்டே அறிவு நூல்களேயும், அறநூல்களேயும் ஆர்வத்துடன் கற்று, தர்மமார்க்கத்தைக் கடைப்பிடித் தொழுகும் அறிவின் மிக்காரே மிகுதியும் பாவியிருந்து வந்தகாரணத்தால் புண்ணிய பூமியெனப் பெயர்பெற்ற நம் பாரதநாட்டில் கால வேறுபாட்டால் மனிதரின் அறிவு மாறுபட்டுக் காலந்தோறும் பற்பல விகற்பத்தை அடைந்து வருகின்றது. அதனுல் மனித சமூகத்தார் ஒழுக்கங்களிலும் மாறுபாடுடையவர்களாய்க் காணப்படுகின்றனர். அவர்களுள் சிலர், அறநெறி பிறழாது நடந்து மேம்பாடுற்று வாழ்ந்துவரினும் பெரும்பான்மையோர் அம்மார்க்கத்தினின்றும் நழுவினவர்களாய் நன்மையைத் தீமையாகவும், தீமையை நன்மையாகவும் கருதித் தங்கள் மனம் போனவாறே நடந்து உலகினுக்குப் பெருந்தீங்கை விளேவிக்கின்றனர். சுகமான மார்க்கங்களேயும் துன்பமார்க்கங்களாக்கிக்கொண்டு அல்லலடைகின்றுர்கள். அங்ஙனம் அவர்கள் துன்புறுவதுமன்றி மற்றையர்க்கும் துன்பத்தை விளேவிக்கின்றனர். இவற்றிற்கெல்லாம் முதல் காரணமாகப் பொறாமைக்குணத்தையே பொன்னேப்போலப் போற்றுகின்றனர். இந்தப் பொறாமையைப் பலவகைச் செயல்களிலும் உபயோகப்படுத்தி நலமிழந்து திரிகின்றனர். அவ்வாறு இவர்கள் கொள்ளும் பொறாமைச் செயல்களுள் ரெயில்வேப் பொறாமை முதன்மைபெற்றதாகும்.

இந்த இருப்புப்பாதைத்தொடர் புறநாட்டவரால், பொருளே வாரிக்கொண்டு போவதற்கு நம்நாட்டில் கொண்டு வந்து புகுத்தப்பட்டது; எங்கும் பாவியது, பாவிக்கொண்டிருப்பது, பாவப்போவது. இது, நாடோறும் நம்மவர் பொருள்களே இரகசியமாகக் கவர்ந்து கொண்டிருப்பினும் இதனுல் சில சௌகரியங்களிருப்பதாக இங்குள்ளவர்கள் கருதினுர்கள். தூரதேசங்களிலுள்ள அவசாகாரியங்களுக்கு

விரைந்து செல்வதற்கும், வேறு சில காரியங்களுக்கும் மிகுந்த அனுகூலங்களிருப்பதாக இதனை மிகுதியும் விரும்பினார்கள். அதனால், காரியமுள்ள பலரும் இதில் ஏறிப் பிரயாணஞ் செய்யத்தொடங்கினார்கள். நாளேறவேற இவ்வகைப் பிரயாணம் நம் ஜனங்களுக்குள் அதிகரித்து விட்டது. காரியமில்லாதவர்களுங்கூட வீணே வேடிக்கை பார்க்கவும், டிராமா பார்க்கவும், சென்னை ஆனந்தபவன், ஆரியபவன், கோமளவிலாஸ் முதலிய ஹோட்டல்களில் காப்பி பலகாரம் சாப்பிடவும், வேறு சில அடாச்செய்கைகளைச் செய்யவும் அளவுக்கு மிஞ்சிப் பிரயாணஞ்செய்யும் வழக்கத்தை மேற்கொண்டு விட்டார்கள். இதனால் புகைவண்டியில் கூட்டமில்லாத நாளே இராது. இப்படிக் கூட்டம் அதிகரிப்பதால் இவர்கள் நினைத்த சௌகரியத்திற்குப்பதிலாக அசௌகரியத்தையே உண்டாக்கிக் கொள்கிறார்கள். எவ்வளவு கூட்டமிருந்தாலும் இவர்களுக்குள் இனவொற்றுமையிருந்தால் ஒருவர்க்கொருவர் உதவிசெய்து கொஞ்சம் சௌகரியத்தை உண்டாக்கிக்கொள்ளலாம். அந்த ஒற்றுமைதான் நம்மவர்க்குள் ஏற்படுவது அருமையாயிருக்கின்றது. பொறாமைதான் அதிகரிக்கின்றது. இந்தப் பொறாமைக்குணத்தால் ஒருவர்க்கொருவர் செய்யும் இடைஞ்சல்கள் எண்ணில; இவற்றாலுண்டாம் துன்பங்களுக்கோ அளவில்லை.

முன்னேபோய் வண்டியில் ஏறிக்கொள்பவர்கள் பின்னே ஏற வருபவர்களைக்கண்டால் புலிகளைப்போல் உறுமுகிறார்கள்; சிங்கங்களைப்போல் சீறுகிறார்கள்; தங்களுக்கே வண்டி சொந்தமென நினைக்கிறார்கள்; மற்றவர்களும் தங்களைப்போல் பணங்கொடுத்தவர்கள்தாமே; அவர்களுக்கும் நாம் இடங் கொடுக்கவேண்டியது நியாயந்தானே என்ற உணர்ச்சி இவர்களிடம் சிறிதுமுண்டாவதில்லை. இவர்களுடைய பொறாமைச்செயல்கள் விநோதம் விநோதமாயிருக்கின்றன: வண்டியில் ஏறுதற்கும் இடமில்லாமல் மனிதர் திண்டாட்டப்படுங்காலத்தில், நெஞ்சிரக்கமற்ற ஒருவர், நான்குபேர் இருக்கக்கூடிய ஒருபக்கப் பலகையில் விறைத்துப்படுத்துக்கொண்டு தம்மிடம் வந்து இடம் கேட்கும் மனிதர்களிடமெல்லாம் தமக்கு எழுந்திருக்கமுடியாத நோயென்று பாசாங்கு செய்கிறார்; சாதாரண ஏழை மனிதர்களைக்கண்டால் அதிகாரம் செய்து துரத்திவிடுகிறார்; தம்மைப்போன்ற முண்டரைக்கண்டால் சண்டை போடுகிறார். வேறு சிலர் ஒரு கம்பார்ட்மெண்டிலிருந்துகொண்டு நான்கு

பேருக்கு இடமிருக்கும்போதே, அங்கு வருகிறவர்களிடத்தில், இங்கேயிருக்கும் நாலுபேர் காப்பிசாப்பிடப் போயிருக்கிறார்கள் என்று பொய்கூறி அந்த இடத்தைப் பாதுகாக்க உபாயந் தேடுகிறார்கள்; இன்னும் சிலர், கதர் ஆடை அணிந்து, எல்லோரும் ஒற்றுமையா யிருக்கவேண்டும் ; தேசப் பொதுநன்மைக்குப் பாடு படவேண்டும் என்று மகாதேசோபகாரிகளைப் போல் பிரசங்கம் புரிந்துகொண்டே வருகிறார்கள் ; அவர்கள் இருக்கும் வண்டியில் நாலைந்துபேர் இருக்க இட மிருக்கிறது ; அப்படி யிருக்கும்போது வண்டி புறப்படும் சமயத்தில் பிரயாணி யொருவர், மனைவியுடனும், தாயாராகிய கிழவியுடனும், இரண்டு மூன்று சிறு குழந்தைகளுடனும் ஐந்தாறு மூட்டைகளைத் தூக்கிக்கொண்டு அவசரமாக அந்த வண்டியில் ஏறவருகிறார் ; ஒற்றுமைக்குப் பிரசங்கம் செய்துகொண்டு வந்த புண்ணிய சீலர்கள் உடனே பாய்ந்து, 'இங்கே இடமில்லை ; பக்கத்து வண்டியைப் பாரும்' என்று கழுத்தில் கையைப்போட்டுக் கீழே தள்ளிவிடுகிறார்கள் ; வேறு பலர் 'நமக்கு உடம்பே சொந்த மில்லை ; மற்ற பொருள்களில் என்ன சொந்தமிருக்கிறது ?' என்று வேதாந்தம் பேசிக்கொண்டே வருகிறார்கள் ; அவர்கள் இருக்கும் வண்டியில் இரண்டு பேருக்கு இடமிருக்கிறது; அப்போது ஒருவர் நெடுந்தூரத்திலிருந்து ஓடி வந்து இளைப்புடன் அவ்வண்டியிலேறப் போகிறார்; முன் வேதாந்தம் பேசியவர்கள், 'என்ன ஐயா! வேறே வண்டி பார்க்காமல் துரூ (Through) வாய்ப் போகும் எங்களிடம் வந்துதானா தொந்தரவு கொடுக்கவேண்டும்' என்று அவரை ஒரே தள்ளாகத் தள்ளிவிடுகிறார்கள். பின்னுஞ் சிலர் வண்டியில் ஏறப் போகும்போது இப்படியே பலரால் தள்ளப்பட்டு அவஸ்தை யடைந்து ஒருகம்பார்ட்டுமென்டிலுள்ளவர்களைக் கெஞ்சிக் கொஞ்சம் இடம் பெறுகிறார்கள். அவ்வாறு இடம் பெற்றிருந்தவுடன் தாம் முன் பட்டபாட்டை மறந்து விடுகிறார்கள்; பின்னர் தாமே அவ்விடத்திற்கு அதிகாரியாய், வந்தவர்களைத் தள்ள ஆரம்பிக்கிறார்கள். ஒருவகுப்பார் கூட்டமாக வந்து ஒரு வண்டியில் ஏறுகிறார்கள் ; அதில் முன்னே ஏறியிருந்த நல்லவர் ஒருவர், அவர்களை மரியாதையுடன் வரவேற்றுக் கொள்கிறார்; வந்தவர்கள், அவர் செய்த நன்றியை மறந்து அவரை ஒரு மூலையில் ஒதுக்கி நெருக்கி, 'நாங்கள் ஒரே இனத்தாராக இங்கிருக்கிறோம்; நீங்கள் வேறு வண்டிக்குப் போய் விட்டால் சௌகரியமாயிருக்கும்' என்று அவரை வெளியேற்றி விடப் பிரயத்தனப் படுகிறார்கள். சிலர், சில வண்டிகளில்

கால்களைப்பரப்பி உட்கார்ந்து பலர் இருக்குமிடத்தை மறைத்துக் கொண்டு பிரயாணிகள் வரும்போது அவர்கட் கிடங் கொடுக்காமல் தஞ்சையிலிருந்து சென்னை வரும் வரை அவர்களை நிற்க வைத்து நெஞ்சிரக்க மற்றிருக்கிறார்கள். சிலர், தாங்கள் சௌகரியமாய்ப் படுத்துக் கொள்ளத்தக்க இடத்தைக் கவர்ந்து கொள்ளும் பொருட்டு அங்கே இட்டலியையும், சோற்றையும், தயிரையும், குழம்பையும், கலந்து சிதறி விட்டு வருகிறவர்களிடத்தில், 'இங்கே நோயாளி வாந்தி யெடுத்துக்கொண்டு கிடக்கிறார்' என்று கூறுகிறார்கள்; வந்தவர்கள் மூக்கைப்பிடித்துக் கொண்டு தாமே வேற்றிடஞ் சென்று விடுகிறார்கள். சிலர் உத்தியோக இறுமாப்பால் ஐரோப்பியரைப் போல் உடையணிந்து சில வண்டிகளில் இருந்து கொண்டு அங்கே வருகிறவர்களை உறுத்துப்பார்த்துத் துரத்துகிறார்கள். பொதுமகளிர் சிலர் இடம்பமாக ஆடையாபரணங்களை அணிந்து கொண்டு வந்தால் ஆடவர் சிலர் அவர் தயவைப் பெறவேண்டி அவர்களை ஒரு வண்டியில் வைத்துப் பூட்டி விடுகிறார்கள். பலர் இடமில்லாமல் துன்புறும் போது அந்த நித்திய கலியாணிகள் சௌகரியமாய்ப் பிரயாணஞ் செய்கிறார்கள். சில நித்திராசுக வாசிகள், ஜனங்கள் நடந்து செல்லும் வழிகளில் படுக்கையை விரித்துப் படுத்துக்கொண்டு ஜலஸ்பரிசம் முதலிய அவசர காரியங்களுக்குப் போகவேண்டியவர்களுக்கும் வரவேண்டியவர்களுக்கும் வழிவிடாமல் 'வேறுபக்கம் எப்படியாவது செல்லுங்கள்' என்று சொல்லி வம்பு செய்கிறார்கள். மேற்கூறிய அவசர காரியக்காரர்கள் படுந்துன்பத்திற்கு அளவே யில்லை. சிலர் தங்கள் இனத்தாரைக் கண்டால் மாத்திரம் கூவியழைத்தாவது அவர்க் கிடங் கொடுத்து விட்டு மற்றையரைத் துரத்துகிறார்கள்.

இப்படியே இவர்கள் ஒருவர்க்கொருவர் எத்தனையோ எண்ணத்தொலையாத நெருக்கடிகளைச்செய்து இடுக்கணுறுகிறார்கள். அவற்றுள் ஒவ்வொன்றையும்எடுத்தெழுதுவதென்றால் இவ்வுரை மிக விரிவெய்தும். அவற்றை அனுபவத்தால் ஒவ்வொருவரும் தெரிந்து கொள்ளலாம். இந்தப் பொறாமைச் செயல்களால் புகைவண்டிப் பயணத்தில் நடக்கும் சண்டைச் சச்சரவுகள் எண்ணில. அந்தோ! ஒவ்வொருவரும் வண்டியில் கொஞ்சநேரமே கொஞ்சதூரமே பிரயாணஞ் செய்கிறார்கள். அதற்குள் இடப்பாத்தியங் கொண்டாடி ஏன் இவ்வாறு துன்பத்தை யுண்டாக்கிக்கொள்ள வேண்டும்? பணத்தையும் கொடுத்துவிட்டு ஏன் இந்தப் பாடுபடவேண்டும்?

ஒவ்வொருவரும் இனவொற்றுமையையும், நடு நிலைமையையும், இரக்கசித்தத்தையும், பொறுமையையும், சுயநல மின்மையையும் கொண்டிருந்தால் இத்துன்பம் எப்பொழுதும் விளையமாட்டாதே. அந் நற்குணங்கள் பெரும்பான்மையோரிடம் இல்லாமையினாலல்லவா இப்பொல்லாங்குகள் நேருகின்றன. ரெயில்வே வேலைக்காரரால் பொது ஜனங்களுக்கு ஏற்படும் சகிக்கொணாத துன்பங்கள் ஒருபுறமிருக்க, அவற்றை நீக்கிக் கொள்ள முயலாமல் பொறுமைக் குணத்தால் நமக்கு நாமே துன்பங்களை விளைவித்துக் கொள்வது வியப்பினும் வியப்பு. இந்தச் சிறு விஷயத்தில் பிறருக்குச் சௌகரிய முண்டாகப் பொறாத நாம் பெருங்காரியங்களில் ஒற்றுமை பெற்று நலமடைவதெப்படி? நாம் மற்ற நாட்டாரைப் போன்று நம்முடைய சுதந்தரங்களைப் பெற்று என்றும் இன்புற்றுச் சகல விஷயங்களிலும் சந்தோஷமடைந்து வாழவேண்டுமானால் இத்தகைய சிறுகாரியங்களிலும் ஒற்றுமை பெறவேண்டும்; ஒருவர் சுகத்தை ஒருவர் நாடவேண்டும்; நம் நாட்டாரனைவரையும் நம் சகோதரரென்றே கருதவேண்டும். இது சாதாரண விஷயமாகச் சிலருக்குத் தோற்றலாம். ஆழ்ந்து யோசிப்பார்க்கு, நம் நலத்தைக் கெடுப்பதற்கு இத்தகைய காரியங்களில் ஒற்றுமையற்றதன்மையே காரணமென்பதும், இதனை அதிகமாக வற்புறுத்தி எழுதவேண்டுமென்பதும் விளங்கும்.

ஆதலின், இத்தகைய சமயங்களில் பொறுமைக் குணத்தை விடுத்து, எல்லோரும் சகோதரத்துவமடைந்து இன்புற்றுவாழும் நெறியில் நிலைபெற்று நிற்குமாறு இறைவன் அருள்புரிவானாக.

ஓம் தத் ஸத்.

## தேசநலப் பகுதி.

### லோகமான்ய பாலகங்காதர திலகர்.

(157-ம் பக்கத் தொடர்ச்சி.)

#### காங்கிரஸ் தொண்டு.

பிறகு அவர் இராஜீய விஷயங்களில் மிகவும் தீவிரமாகத் தலையிட்டு உழைக்க ஆரம்பித்தார். தேசநன்மையைக் கருதி உழைத்து வந்த காங்கிரஸ் மகாசபையின் தக்ஷிண கமிட்டிக்கு அவர் பல ஆண்டுகள் வரையில் காரியதரிசியாக இருந்து ஊழியம் செய்துவந்தார். பத்தாவது காங்கிரஸுக்

கும் லோகமான்ய திலகரே காரியதரிசியாக இருந்து உழைத்து வந்தார். ஆசார சீர்திருத்த மகாநாடும் காங்கிரஸ் பந்தலிலேயே நடைபெறுமென்று கேள்விப்பட்டதும் அவர் அந்தவேலையிலிருந்து விலகிக்கொண்டார். பம்பாய் மாகாண கான்பரென்ஸுக்கு அவர் பலசமயங்களில் காரியதரிசியாக இருந்து தேசத்தொண்டு செய்துவந்தார். பம்பாய் மாகாணத்தில் நடைபெற்ற முதல் ஐந்து கான்பரென்ஸுகள் லோகமான்ய திலகரின் முயற்சிகளினாலேயே நடைபெற்றன. 1893-ம் வருஷத்தில் ஹிந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் பெரிய சச்சர வேற்பட்டது. அப்போது திலகர் அவ்விருவகுப்பினர்க்குள்ளும் ஏற்பட்டிருந்த விரோதத்தையும், வேற்றுமைக் குறைவுகளையும் நீக்கி அவர்களுக்குள் ஒற்றுமையும், சினேகப் பான்மையும் ஏற்படும்படி செய்தார்.

பம்பாய் சர்வகலாசாலையார், பம்பாய்ச் சட்டசபைக்கு லோகமான்ய திலகரை இருமுறை தங்களுக்குப் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுத் தனுப்பினார்கள். 1895-ம் வருஷம் அவர் பம்பாய் நகரசபைக்கு ஓர் அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். பம்பாய் நகரசபையில் அங்கத்தினராக இருந்த காலத்தில் நகரவாசிகளின் நன்மையைக் கருதி அவர் பல அரிய ஊழியங்களைச் செய்திருக்கின்றார்.

பொது ஜனங்களுக்கு நாட்டு உணர்ச்சியை உண்டாக்க அவர் பெரிதும் உழைத்து வந்தார். பெரிய வீரர்களின் பொருட்டு விழாக்களைக் கொண்டாடுவதனால் ஜனங்களுக்குத் தேசபக்தி அதிகமாகு மென்பதை அறிந்து அவர் மகாராட்டிர வீரரான சிவாஜிக்கு விழாக்கொண்டாட வேண்டுமென்று அடிக்கடி தமது பத்திரிகைகளில் எழுதிவந்தார். ராய்கஞ்ச் என்ற இடத்திலிருந்த சிவாஜிவீரரின் உருவச்சிலையையும், கோட்டையையும் பழுதுபார்க்க வேண்டுமென்று அவர் "கேஸரி" பத்திரிகையில் எழுதியதும் அதற்காகச் சுமார் 20000 ரூபாய் வரையில் அவருக்குக் கிடைத்தது. அந்தப் பணத்தைக் கொண்டு திலகர் அந்த சிவாஜிவீரரின் உருவச்சிலையையும், கோட்டையையும் பழுதுபார்த்து, அவருடைய ஞாபகார்த்தமாகப் பலப்பெரும் விழாக் கொண்டாட்டங்களை நடத்தினர்.

தற்காலம் நாட்டில் போதிக்கப்பட்டு வருகின்ற கல்விமுறையில் திலகருக்கு வெறுப்பு அதிகம். இந்தியர்கள் மேன்மையுற வேண்டுமானால் சிறந்த முறையில் அவர்களுக்குக் கல்வி போதிக்கப்படவேண்டும் என்ற விஷயமாக அவர் அடிக்கடி தமது "மராட்டா" பத்திரிகையில் பல சிறந்த கட்டுரைகளை எழுதிவந்தார். ஹிந்துமதத்திலும், ஹிந்துப் பெரியோர்களிடத்திலும் திலகருக்கு அளவுகடந்த அன்பும், பக்தியும் உண்டு. ஹிந்துக்கள் தங்களது மதக்கோட்பாடுகளின்படி நடந்து தங்களது பெரியார்களைப் போற்றி வந்தால், ஹிந்துமதமும், சமூகமும் சிறப்புற்றோங்கி வளருமென்று லோகமான்யதிலகர் நம்பியிருந்தார். 1896-ம் ஆண்டிலே பம்பாய் மாகாணத்தில் ஒரு கொடியபஞ்சம் ஏற்பட்டது. ஏழைஜனங்கள் பஞ்சத்தினால் பீடிக்கப்பட்டுப் பலவித கஷ்டங்களை அனுபவித்து வந்தனர். திலகர் அந்தக்கொடிய

பஞ்சத்தினல் பீடிக்கப்பட்டு வருந்தும் ஏழைஜனங்களைக்காக்க மிகவும் கஷ்டப்பட்டு உழைத்துவந்தார். தானியக்கடைகளைப் பல இடங்களிலேற்படுத்தி அவற்றில் எளியஜனங்களுக்கு விலைசகமாக உணவுப் பொருள் கிடைக்க அவர் ஏற்பாடுசெய்தார். நாகப்பூரிலும், ஷோலாம்பூரிலு முள்ள நெசவுக்காரர்கள் பஞ்சத்தினல் பீடிக்கப்பட்டுக் கஷ்டப் படுவதைக்கண்டு அவர், அவர்களுடைய கஷ்டங்களை நீக்கப் பல விதத்திலும் முயன்று வந்தார். 1897-ம் வருஷத்தில் பம்பாய் மாகாணமுழுவதும் பிளேக் என்ற கொடியநோய்பரவியது. அந்தநோயைப் பரவாமல் தடுக்க, திலகர் பூனநகரில் பல வைத்தியசாலைகளை ஏற்படுத்தி ஜனங்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்துவந்தார். தமது உயிருக்கும் அஞ்சாமல் அவர் அக்காலத்தில் எளியவர்களுக்குச் செய்த உதவிகள் அளவிடக் கூடியவைகளல்ல. 1895-ம் வருஷம் ஜூன்மாதம் 13-ந்தேதி சிவாஜியின் உற்சவம் கொண்டாடப்பட்டது. 15-ந்தேதியன்று, அவர் சிவாஜியின் பெருமைகளைப் பற்றிக்கூறியவைகளையும், தூங்கிக்கிடந்த மகாராஷ்டிரர்களை விழித்துக்கொள்ளும்படி செய்ய அவர் கூறிய மொழிகளையும், "கேஸரி" பத்திரிகையில் எழுதிவெளியிட்டார்.

## மீண்டும் சிறைவாசம்.

ஷை ஜூன்மாதம் 22ந்தேதியன்று மிஸ்டர் ராண்ட் என்பவரும், லெப்டினண்ட் அபஸ்ட் என்பவரும் ஒரு மகாராஷ்டிர பிராமணச் சிறுவரால் கொலையுண்டனர். இக்கொலைக்குத் திலகர் தமது "கேஸரி" பத்திரிகையில் எழுதியுள்ள கட்டுரைகளே காரணம் என்று அரசாங்க உத்தியோகஸ்தர்கள் அபிப்பிராயப்பட்டார்கள். திலகரிடத்தில் முன்பே அரசாங்கத்தாருக்கு அதிருப்தியும், வெறுப்பும் ஏற்பட்டிருந்தன. "கேஸரி" பத்திரிகையை அடக்கவேண்டுமென்று அவர்கள் எண்ணங்கொண்டு ஷை ஜூன் மீ 27-ந்தேதி யன்று லோகமான்ய திலகரைப் பம்பாயில் கைதுசெய்தார்கள். பிறகு பம்பாய்ஹைகோர்ட்டில் விசாரணை நடந்தது. அதில் லோகமான்யருக்குப் பதினெட்டுமாதம் சிறைவாசதண்டனை விதிக்கப்பட்டது. அந்தவழக்கு சம்பந்தமாக அவர் பிரிவி கௌன்ஸிலுக்கு மனுச்செய்து கொண்டார். அதனல் யாதொருபயனும் ஏற்படவில்லை. இங்கிலாந்தில் திலகரிடத்தில் அதிகமதிப்பும், கௌரவமும் வைத்திருந்த அறிஞர் மாக்ஸ்முல்லரும், வில்லியம் ஹண்டர் என்பவரும் அவரை விடுதலை செய்துவிடவேண்டுமென்று மகாராணிக்கு மனுச்செய்து கொண்டதன்மேல் அவர் கைதுசெய்யப்பட்ட ஒருவருஷ காலத்திற்குள் விடுதலை செய்யப்பட்டார்.

சிறைவாசம் செய்ததன் பயனக அவரது உடல்நிலை மெலிந்து அவருக்குப் பலகஷ்டங்கள் ஏற்பட்டன. அதனல் அவர் கொஞ்சகாலம் தமது தேக சௌக்கியத்தைக்கருதி சிங்க்ஹாட் என்ற இடத்தில் காலங்கழித்து வந்தார். பிறகு 1898-ம் வருஷம் அவர் இச்சென்னையில் நடைபெற்ற காங்கிரஸூக்கு வந்து இங்கிருந்து இலங்கை முதலிய இடங்களுக்குச் சுற்றுப்பிரயாணம் செய்தார்.

சிறையிலிருந்து வந்தகாலத்தில் அவர் ருக்வேதத்தை ஆராய்ச்சிசெய்து வந்தார். 1898-ம் ஆண்டில் சிறையிலிருந்து விடுதலையடைந்து சிங்ஹாட்டில் தங்கியிருந்த பொழுது "வடதுருவத்தில் வேதத்தின் இடம்" என்ற ஓர் அரியநூலை எழுதிமுடித்தார். அந்தநூலைச் சிலகாலம் வரையில் அவர் வெளியிடவேயில்லை. பின்பு 1903-ம் வருஷம் மார்ச்சுமாதத்தில் அச்சிறந்த நூலை வெளியிட்டார். அந்த நூலைப் போற்றிப் புகழாதார் ஒருவருமேயில்லை.

பின்பு அவர் நாளுக்குநாள் காங்கிரஸிலீடுபட்டு, தேசத்தொண்டுசெய்வதற்கு ஆரம்பித்தார். அக்காலத்தில் லார்டு கர்சன்துரைமகனார் இந்தியாவுக்கு இராஜப்பிரதிநிதியாக இருந்து வங்காளப் பிரிவினைத் திட்டத்தை ஏற்படுத்தினார். வங்காளப் பிரிவினைத் திட்டம் அக்காலத்தி லிருந்து வந்த ஜனங்களுக்குள் ஆத்திரத்தையும், தீவிர உணர்ச்சியையும் எழுப்பிவிட்டது. லார்டு கர்ஸனின் வங்காளப் பிரிவினைத் திட்டத்தையும், அடக்குமுறைகளையும் கண்டு லோகமானிய திலகர் காங்கிரஸில் அமிதவாதக் கட்சியென்ற ஒரு தீவிர தேசீயக்கட்சியை ஏற்படுத்தினார். இக்கட்சியினர்கள் மிதவாதிகளைப்போல் அரசாங்கத்தைக் கெஞ்சாமல் சுயமதிப் புள்ளவர்களாய், சுதேசீயத்தைக் கைக்கொண்டு, அன்னிய சாமான்களைப் பகிஷ்கரித்து, சட்டமறுப்பு முதலிய வழிகளைக் கையாண்டனர். அந்தக் கட்சிக்கு லோகமான்ய பாலகங்காதர திலகரே தலைவராகச் சிறந்து விளங்கினார். மிதவாதக்கட்சியினர் திலகரின் கட்சிக்கு விரோதமாகத் தங்கள் காரியங்களைச் செய்துவந்தனர். லோகமான்யதிலகர் நாட்டில் தமது கட்சியைப் பலப்படுத்த மிகவும் பாடுபட்டு உழைத்துவந்தார். 1907-ம் ஆண்டில் சூரத்நகரில் டாக்டர் ராஷ்பிஹாரி கோஷ் அவர்களின் தலைமையின்கீழ் நடைபெற்ற காங்கிரஸில் இரண்டு தனிக் கட்சிகள் ஏற்பட்டுக் காங்கிரஸ் கலைந்துபோய் விட்டது. பலர், திலகரினால் தான் காங்கிரஸ் கலைந்தது என்று அவரை, வாயில் வந்தபடி தூற்றினார்கள். ஆனால் சூரத்பிரிவினைக்குக் காரணம் பாலகங்காதரதிலகர் அல்லர். அதைப் பற்றி ஈண்டு விரித்துக் கூறவேண்டிய அவசியமில்லை. (தொடரும்)

திரு. கே. சு.

---

## இந்நாளைய இந்தியா.

### எங்கும் ஒரே சப்தம்.

பல கோடி ஜனங்களால் நிறையப்பெற்ற நமது தேசம் இந்நாளில் படுங் கஷ்டங்களையும், அவஸ்தைகளையும் எடுத்துரைத்து அவற்றை நீக்குதல் என்பது கடினமே. ஒரு சிறிய கிராமத்திலும் பல மதங்கள்; அம்மதங்களிலும் பல்வேறு ஜாதிகள்; இந்த ஜாதிகளிலும் பல பல பிரிவுகள்; ஒரு குடும்பத்திலும் ஒற்றுமை என்பது அபூர்வம். கடவுளைத் தொழும் வகையிலும் இதர பழக்க வழக்கங்களிலும் ஒரு சிலர்கூட வேறு கூட்டத்தினரை ஒத்திருப்பதில்லையென்றால், ஒருவரது எண்ணமும் விருப்பமும் பிறரால் ஒப்புக்கொள்

எப்படுமோ? அறிவிற்சிறந்த பெரியாரொருவர் அமிர்தம்போன்ற அழகிய வார்த்தைகளை அன்புடன் உபதேசித்திடினும் அதனை எதிர்த்தும் தடுத்தும் பேசுவோர் எத்தனைபேர்? பொதுவான விஷயமென்றால் தம் காதிலும் அதை வாங்காமற் செல்வோர் எவ்வளவு? நாட்டின் முன்னேற்றத்தைப்பற்றியதென்றால் 'அதுவேலையற்ற வீணர் செய்கை' என்று வெறுப்புடன்கூறி வாளா விருப்போரின் எண்ணிக்கை எவ்வளவு? வாளாவிருத்தலும் நன்மையைத் தருமே. வேறு சிலர் அங்ஙனம் சும்மாவுமிராமல் நாட்டிலுள்ள நல்லதோர் கட்சிக்கு விரோதமான கட்சியொன்றை ஸ்தாபிதம் செய்து அவர்களுடன் முஷ்டியுத்தம் செய்யத் தொடங்குகின்றனரே! இவர்கள் தன்மை வாய்ந்தோர் நம் தேயத்தில் எவ்வளவுபேருளர்? நற்செய்கைகள் செய்யப்படும் பொழுதும், ஸத்விஷயங்கள் உபதேசிக்கப்படும்வரையிலும் "ஆ! மிகவும் சரி!" என்று தலையை ஆட்டிவிட்டுப் பிற்பாடு அவ்வுபதேசங்கட்கு எதிர்மாறாக நடப்போரின் எண்ணிக்கைக்கும் குறைவுண்டோ? நாடகமும் கூத்துமென்றால் 'நான்! நீ!' என்று முன்வரும் வீரர்கள் 'கதர்' என்றால் 'அது தூக்கமுடியாத சாக்கு மூட்டை' என்று கூறுவதை நாம் எத்தனைமுறை எவ்வளவு பேரிடமிருந்து கேட்டிருப்போம்?

இவற்றினின்றும் நாம் அறிவதென்ன? புதியதோர் விஷயமொன்றுமல்ல; அதாவது எல்லாவிஷயங்களிலும் நாம் எல்லோரும் வேற்றுமையான தன்மையையும் எண்ணத்தையும் கொண்டிருக்கிறோம் என்பதே. ஆனால் இப்படிப்பட்ட வேற்றுமைகொண்ட நம் எல்லோரிடமிருந்தும் ஒரு விஷயத்தில் மட்டும் ஒரேமாதிரியான ஒலி உண்டாகுமாயின், அதனைக்கண்டு நாம் ஆச்சரியமடையாமற் போவோமோ? 'எங்கும் ஒரே சப்தத்தை' ஒருவன் என்றும் காண்பானாயின் அவன் ஆச்சரியமடையாமற் போவனோ? ஆனால் தற்போது நாம் அறியவேண்டிய விஷயமாவது எங்கும் உண்டாகும் ஒரே சப்தமாவது யாது என்பதே யன்றோ?

## முன்னொருகாலத்தில்.

நவீன நாகரீக வழக்க ஒழுக்கங்களுக்கு ஏற்றவாறு ஏற்படுத்தப்பட்டுத் தினே தினே பலவிதங்களிலும் அதிகரித்து வருகின்ற தற்காலத்திய பள்ளிக்கூடங்களில் பயிலும் நமது சிறுவர்களின் தமிழ்ப்பாட புத்தகமொன்றை வாங்கிப்பாருங்கள். அப்புத்தகத்தில் ஏதாவது ஒரு கதையோ அல்லது ஒரு வீரனது வீரியம் மிகுந்தசெயலோ கூறப்பட்டிருக்குமாயின், அது முதலில் "முன்னொருகாலத்தில் ஒரு ஊரில் ஒருவன் இருந்தான்" என்று ஆரம்பஞ் செய்யப்பட்டிருக்கும்.

அஃதேபோல முன்னொருகாலத்தில், அன்னியர் கூட்டமும் ஏனைய அநாகரீக அவதிகளும் அடியோடு இல்லாமலிருந்த முன்னொருகாலத்தில் நாம் முதலில் கூறிய ஒரு சப்தம் எங்கும் குடிகொண்டிருக்கவில்லை. அதற்குக் காரணம் அக்காலத்தினர் அக்காலங்களில் தாங்களே ஏற்படுத்திக்கொண்ட தலைவனது கட்டளைகளிலும் சொற்களிலும் மூடநம்பிக்கைகொண்டு நடந்து வந்தமையே என்போம்.

## மூடநம்பிக்கை.

சில காரணங்களைக்கொண்டு ஜனங்களுக்கு சில விஷயங்களில் மூடநம்பிக்கை இருத்தலே நலம் பயக்குமென்போம். குதர்க்கமான எண்ணங்கள் உண்டாகக்கூடிய ஸ்வதந்திரம் கொடுக்கப்படுவதால்தான் ஒரு மனிதன் விபரீத விஷயங்களுக் காளாகிறான் என்றும் சொல்லலாம். ஆனால் மூடநம்பிக்கையும் ஆபத்தை அதிகமாய்ப் பயக்கத்தக்கதே யெனினும் விபரீத எண்ணங்களையும் வேற்றுமையான யோசனைகளையும் கொண்டு அதன்படி நடப்பதைவிட முன்னொருகாலத்தில் சிறந்தவோர் உத்தமனைத் தலைவனாகக்கொண்டு அவனது வார்த்தைகளில் திடமானதோர் நம்பிக்கைவைத்து அதன்படி நடந்துவந்தோரது செய்கையையே மேலென்போம். ஆகவே மகாத்மாவென்றும், புத்தியிற் சிறந்தவனென்றும், ஒழுக்கத்தில் உயர்ந்தவனென்றும் அழைக்கப்படும் ஒருவனது வார்த்தைகளிலேனும் நம்பிக்கைவைத்து அவனை அனுஸரித்து நாம் நடந்துவருவதும் நலம் பயக்குமன்றோ?

## விபரீத எண்ணங்களினால்.

விபரீத எண்ணங்களினாலும் வேற்றுமையான நடத்தைகளினாலும் ஏற்படும் கேடுகளைக் கவனியுங்கள். இவைகளினால்தான் 'ஒரு சப்தம் எங்கும்' உண்டாகிறது என்போம்.

நாம் இவ்வுலகில் ஜனித்து புத்திதெளிந்தது முதல் எவ்வளவோ மனிதரைக் கண்டிருப்போமன்றோ? அவர்களுள் எவராகிலும் ஒருவர், "எனக்கு நோயொன்று மில்லை" என்று கூறியதைக் கேட்டிருப்போமா? அல்லது வேறு எவரேனும் ஒருவர், "எனக்குப் பணத்தடை என்பது கிடையாது" என்று சொல்லியிருப்பதை நம்செவிகள் கேட்டிருக்குமா? அல்லது, "மனக்கவலையொன்றும் எனக்குக்கிடையாது" என்று எவரேனும் ஒருவர் சொல்லியிருப்பரா?

"ஹா! என் தலைவிதி இக்கஷ்டம்!
ஹா! என் தலையெழுத்து இவ்வியாதி!!
ஹா! என் கதி தரித்திரகதி!!!"

என்ற சொற்களை அல்லது சப்தத்தை நாம் எந்நாளிலாவது, எவரிடமிருந்தாவது எவ்விடத்திலாவது, கேட்காதிருந்த துண்டா?

## ஆதி காரணம்.

எவ்வித விஷயமும் அடிப்படை யானதோர் ஆதிகாரணமின்றி ஏற்படாது; அஃதேபோல் எங்கும் ஒரேசப்தம் உண்டாவதற்குங் காரணமொன்றிருத்தல் வேண்டுமன்றோ? அக்காரணந்தான் என்ன? விபரீத எண்ணங்களேயன்றோ? ஆனால் விபரீத எண்ணங்கள் ஏற்படுவது எதனால்?

* * * * *

ஆங்கிலக்கல்வி இந்தியாவில் அதிகமாயிற்று; இளமையில் விவாகங்கள் செய்வதோ இயல்பாகி விட்டது; குஸ்தி பழகுதலோ கூண்டுடன் அகன்றது;

வண்டி முதலிய வாகனங்களில் ஏறுவதே வழக்கமாயிற்று; கனவாலிபனுயிருக் கையிலேயே கண்ணுடி போடுதல் கௌரவமாயிற்று; நாடகஞ்செல்லுவது நற்காரியமாயிற்று; இரவு முழுதுஞ் சீட்டாடுவது சகஜமாயிற்று; சுருட்டுப் பிடித்தலே சுறுசுறுப்பான செய்கையாயிற்று; பொடிபோடுதலே புருஷலக்ஷணமாயிற்று; கேளிக்கையும் இடம்பமும் தவிர ஸன்மார்க்கங்கள் சரிந்தே போயின.

ஆகவே இந்நிலையிலா நம் இந்தியா இந்நாளில் இருக்கிறது? முனிவர்களாலும் மகான்களாலும் நிறையப் பெற்றிருந்த இந்தியாவா இது? நமது பூர்வீக ஆசாரங்களையும் அற ஒழுக்கங்களையும் அறவே அறுத்தெறிந்துவிட்டு அன்னிய அநாகரிக அவதிகளை ஆர்வத்துடன் ஆபரணமாய் அணியும் அபலைகளே அன்ன நாம் செய்வதென்னே? நமது நாட்டுப்பொருள்களை அயல்நாட்டார் அடித்துக் கொண்டுபோக, அதற்குப் பிரதியாக நாம் அவர்தம் 'நாகரிகமெனும்' அநாகரிக வழக்கங்களைத் தான் திருடுகிறோம். இது நம்விதியா ?—மதியா ?—கதியா ?

## இப்பொழுது என்ன தெரியும்?

இந்தியாவிலுள்ள தற்போதைய இந்தியர் அறிந்திருப்பதென்ன? மூன்று விஷயங்களே: அம்மூன்று விஷயங்களும் 'வறுமைப் பிணி, மெய்ப்பிணி, மனப்பிணி' எனப்படுபவையேயாம். முதலாவதைத்தான் வறுமைநோயென்போம்; இரண்டாவதைத்தான் உடம்பிலேயே யுள்ளநோயென்போம்; மூன்றாவதை மனோவியாதி யென்னலாம்.

இந்துக்கள் திரிமூர்த்திகளைத் துதிப்பர்! ஆனால் இந்தியராய நாமனைவரும் இவ்விஷயத்தில் மட்டும் ஜாதிமத வேற்றுமையின்றி இந்துமத தர்மத்தை அனுஷ்டிப்பதேபோல திரிமூர்த்திகள் போன்ற மேற்கூறிய மூன்று வியாதிகளையும் துதிக்கின்றோம். இதுதான் நமக்கு இப்பொழுது தெரிந்திருப்பது!

## நாளையதினம்.

நாளையதினம் அயல்நாட்டு செசவு சாலைகள் நின்றுவிட்டால் நாம் நான்கர்வதுமூர்த்தி யோன்றைக்' கும்பிட நேரிடுமென்பதிலும் ஐயமுண்டோ? ஆகவே மறுநிமிடமே அயல்நாட்டு நெசவு சாலைகள் நின்று விடுமானால் நாம் "மனோவியாதி, தேகவியாதி, வறுமைநோய்" ஆகியமூன்று தெய்வங்களைக் கும்பிடுவதுடன் "நிர்வாணமாய் நிற்றல்" என்ற தேவதையையும் கைகூப்பித்தொழ நேரிடுமென்பதில் சந்தேகம் கிடையாது.

மூன்று நோய்களால் ஏககாலத்தில் எதிர்க்கப்படும் இந்நாளைய இந்தியா கைத்தொழிலை விர்த்தி செய்யுமா? தேசநலத்துக்கு சிரமப்பட்டுழைக்குமா? சத்தியாக்கிரஹ நெறியைக் கடைப்பிடிக்குமா? நாட்டிற்கு அவசியமாயிருக்கவேண்டிய வினைய முன்னேற்றங்களைக் குறித்துப் பாடுபடுமா.

### ஆனால் எது முக்கியம் ?

ஒரு மனிதன் இம்மண்ணுலகில் விருத்திக்கு வரவேண்டுமாயின் அவனுக்கு எது முக்கியம்? 'சுவரிருந்தாலன்றோ சித்திரம் எழுத முடியும்?' ஆகவே நமக்கு திடமானதேகமே முக்கியமென்று ஏற்படுகிறதன்றோ? திடகாத்திரசரீரத்துடன்கூடி ஆரோக்கியவாழ்வை நாம் நடாத்துவோமாயின் நாம் நமக்கு வேண்டிய ஏனைய சௌகர்யங்களை எளிதில் செய்துகொள்ளுதல்கூடும். இருக்கும் குறைகளையும் குற்றங்களையும் நீக்கிக்கொள்ளவும் கூடும். இது உலகறிந்த உண்மையாதலின், நாம் பின்னும் வற்புறுத்திக் கூறுதல் அனுவசியமே.

### மகாத்மாவின் வாக்கியம்.

ஆயினும் பலத்துடன் கூடிய சுத்தமான தேகத்தை அடைய மகாத்மாவாம் காந்தி மஹான் கூறும் அழகிய வாக்கியத்தைக் கவனியுங்கள்:—

**" Perfect health can be attained only by living in obedience to the laws of God and defying the powers of Satan "**

அதாவது " கடவுளால் நமக்கு இடப்பட்ட கட்டளைகளைச் சிரமேற்கொண்டு நடந்து, தீயகருமங்களைத் தூரவிலக்குதலே பலத்தையும் ஆரோக்கியத்தையும் அளிக்கத்தக்க அருமையான மார்க்கம் என்று கூறுகிறார்.

இனியேனும் நமது நாட்டுப்பெரியோர் நயம்பட உரைக்கும் நலந்தரும் வார்த்தைகளை நாம் கேட்டு அதற்குத் தக்கபடி நடக்க எல்லாம்வல்ல ஈசன் அருள் புரியுமாறு அவனை நாம் எஞ்ஞான்றும் வழுத்துவோமாக.

வ. கிருஷ்ணஸ்வாமி சர்மா.

## அறநெறிப் பகுதி.

### ஆரிய சித்தாந்தம்.

### பொதுத் தர்மம்.

(162-ம் பக்கத் தொடர்ச்சி.)

பிறகு ஆசமனம் செய்துவிட்டு ஜபம் செய்யவேண்டும். தத்தம் மதாசாரியரால் குறிக்கப்பட்டதும், குல பரம்பரையாக வந்ததும், சற்குருவினிடமாக உபதேசம் செய்யப்பெற்றதுமான மந்திரங்களைச் சக்தியானுசாரம் சௌகரியப்படி செய்யவேண்டும். பிராமணர்களுக்குக் காயத்ரீ மஹாமந்திரமே ஜபிக்கத்தக்கது. அதைவிட்டு வேறு எந்த மந்திரங்களையும் ஜபிக்கக்கூடாது. காயத்ரீஜபம் முடிந்தபின் பஞ்சாக்ஷராதி மந்திரங்களை ஜபிக்கலாம். ஓடுகிற ஆறுகள் சமீபத்திலிருக்கும்போது ஏரி, குளங்களில் ஸ்நானம் செய்வது தகாது. பெரிய ஏரி குளங்களை விட்டுச் சிறிய குட்டை முதலிய நீர் நிலைகளில் ஸ்நானம் செய்வது கூடாது. கிணற்று ஸ்நானம் சிறந்ததல்ல, ஆறு

குளங்களில்லாத இடங்களில் கிணறுகளில் ஸ்நானம் செய்யலாம். ஸ்நான பேதங்கள் ஆறுவகையாம்; இவை நித்திய விதியில் விரித்துக் கூறப்பட்டன. பிராமணர்கள் மந்திர உச்சாரணத்துடன் ஸ்நானம் செய்யவேண்டும். சூத்திரர்கள் மௌனமாயிருந்து ஸ்நானம் செய்யவேண்டும். ஸ்திரீகளுக்கு நியமமில்லை. சமுத்திரம் பெரிய நீர் நிலையேயாயினும் அதில் எப்போதும் ஸ்நானம் பண்ணுவது தகாது. அயனப்பிறப்பு, வருஷப்பிறப்பு, பர்வம், கிரகணம் முதலிய புண்ணிய தினங்களில் மாத்திரம் செய்யலாம். ஞாயிறு, செவ்வாயில் வரும் பர்வகாலங்களில் ஸ்நானம் செய்யக்கூடாது. விலக்கப்பட்ட இவற்றில் கிரகணமுண்டானால் ஸ்நானம் பண்ணலாம், தோஷமில்லை. பர்வசம்பந்தமில்லாத கிருஷ்ணாங்காரக சதுர்த்தசியில் ஸமுத்திர ஸ்நானம் செய்தால் சகல பாபங்களும் நீங்கும். ஸேது, காவேரிஸங்கமம், கங்காஸங்கமம் இவற்றுக்கு எந்தத் தோஷமுமில்லை. இவற்றில் எப்போதும் ஸ்நானம் செய்யலாம். இரவில் முன் ஜாமமும், கடைசிஜாமமும் நீங்கலான இரண்டு ஜாமங்களும் நிசி என்னப்படும். இந்த நடு ராத்திரியில் எவ்விதத்திலும் ஸ்நானம் செய்யக்கூடாது. கிரஹணமுண்டானால் ஸ்நானம் செய்வது கட்டாயம். எவ்விடத்திலும் ஸ்நான்ம் செய்யலாம். வியாதியஸ்தர்கள் வெந்நீரில் ஸ்நானம் செய்யலாம். ஹிரண்ய சிராத்தமும் செய்யவேண்டும்.

கிரஹணம் தொட்டுவிடுகிறவரைக்கும் நித்திரை செய்யக்கூடாது. கிரஹணம் பிடித்தவுடனே ஸ்நானம் செய்யவேண்டும். விடத்தொடங்கும்போது தானம், ஜபம், தர்ப்பணம் செய்யவேண்டும். முற்றும் விட்டபின் ஸ்நானம் செய்யவேண்டும். ஞாயிற்றுக்கிழமையில் வரும் சூரியகிரஹணம், திங்கட்கிழமையில் வரும் சந்திரகிரஹணம் இவற்றுக்குச் சூடாமணிகிரஹண புண்ணிய காலமென்று பேராம். இவை மற்றைய கிரஹண காலங்களைவிடக் கோடி பங்கு புண்ணியமுள்ளன.

இரண்டு அயனப்பிறப்புகளும் புண்ணியகாலங்களாம். சித்திரைப்பிறப்பு, ஐப்பசி மாதப்பிறப்பு இவை விஷுபுண்ணியகாலம் என்னப்படும். ஆனி, புரட்டாசி, மார்கழி, பங்குனி இம்மாதப்பிறப்புகள் ஷடசீதிபுண்யகாலம் என்னப்படும். வைகாசி, ஆவணி, கார்த்திகை, மாசி இம்மாதப்பிறப்புகள் விஷ்ணுபதி புண்ணியகாலம் என்னப்படும். அயனம்-உத்தராயணம், தக்ஷிணாயனம் என இரண்டு. தைமாசம் முதல் ஆனி முடிய உத்தராயணம். ஆடிமுதல் மார்கழி முடிய தக்ஷிணாயனம். உத்தராயணம் பிறந்தபின் இருபது நாழிகை வரையும் புண்ணியகாலமாகும். தக்ஷிணாயனம் பிறக்குமுன் இருபது நாழிகையும் புண்ணியகாலமாகும். இதனால் அயனப்பிறப்புகளிரண்டிற்கும் புண்ணிய காலம் உத்தராயணத்திலேயே கொண்டாடப்பட வேண்டுமென்பதாயிற்று. சித்திரை ஐப்பசிக்குப் பிறப்புகளுக்கு முன் பத்து நாழிகையும், பின் பத்து நாழிகையும், ஷடசீதிக்குப் பிறந்த பின் முழுமையும் (அறுபது நாழிகையும்) விஷ்ணுபதியாகிய ரிஷபம், சிங்கம், விருச்சிகம், கும்பம் இம்மாதப்பிறப்புகளுக்குப் பிறக்குமுன் பதினாறுநாழிகையும், பிறந்தபின் பதினாலு நாழிகையும்

புண்ணியகாலங்களாம். இவை யிரவின் பிற்பகுதியிலானால் மறுநாளே காலமாகும். முன்பாதியிலானால் முதல்நாளே புண்யகாலமாம். முதல்நாள் புண்ணியகாலத்தை மாத்தியான்ஹித்தில் அனுஷ்டிக்கவேண்டும். மறுநாள் அனுஷ்டிப்பதானால் உதயாதி ஐந்து நாழிகைக்குள் அனுஷ்டிக்கவேண்டும். அயனம் நீங்கின பத்துப் பிறப்புகளுக்கும் குறிக்கப்பட்ட நாழிகை மூன்றாகப்பகுத்து ஷடசீதிவிஷுக்களில் மூன்றாம் பாகத்திலும், விஷ்ணுபதியில் மத்தியபாகத்திலும், அயனத்தில் முழுமையும் புண்ணியகாலமாகக்கொண்டு அனுஷ்டிக்கவேண்டும். அயன புண்ணியகாலங்களிற் செய்யப்படும் ஸ்நானம் தானம் முதலியன கோடிபங்கு பலனதிகமாகும். மற்றையவற்றில் ஆயிரம்பங்கு அதிகமாகும். ஆடி, கார்த்திகை, மாகம் (மாசி) வைகாசி இம்மாதங்களில் வரும் பௌர்ணமைகளுக்கு ஆகாமாவை என்று பேர். இவையும் புண்ணியகாலங்களாகும். இவற்றிலும் செய்யப்படும் ஸ்நானதானாதிகள் வெகு பலனைத் தரும்.

சித்திரைமாதம் கிருஷ்ணபட்ச சதுர்த்தசியில் சிவசந்நிதியிலிருக்கும் குளத்தில் ஸ்நானம் செய்வது மிகுந்த புண்ணியத்தைத் தரும். மாசிமாதம் வரும் பூர்வபட்ச சப்தமி ஸ்நானம் அதிக பலனை யளிக்கும். துலாமாதத்தில் புண்ணிய நதிகளிலும் தடாகங்களிலும் ஸ்நானம் செய்வதால் பாபங்கள் நீங்கிப் புண்ணியம் விருத்தியாகும். வியாழக்கிழமையும் அமாவாசையும் கூடின தினத்தில் அரச நிழலிலிருந்து எதில் ஸ்நானம்செய்தாலும் பிரயாகையில் ஸ்நானம் செய்தபலன் கிடைக்கும். தைமாதச் சுக்கில ப்ரதமை தொடங்கி மாசி அமாவாசை வரையில் சாந்திரமானப்படி மகமாத (மாசிமாத) மாகும். இது மாகமாத மென்னப்படும். இம்மாதம் சூரியனுதிக்கும்போது புண்ணிய நதிகளில் ஸ்நானம் செய்வது மிகுந்த புண்ணிய பலனைத் தரும். இக்காலத்தில் ஸ்திரிசூத்திரர்களே ஸ்நானம் செய்யலாம்; பிராமணர்கள் நித்திய கர்மானுஷ்டானத்தை முடித்துக்கொண்டு உதித்தபின் ஒன்றரை நாழிகைக்குள் மாகஸ்நானம் செய்யலாம். மாகஸ்நான முதல் நாள்தொடங்கி முப்பது நாளும் தவறாமல் ஸ்நானம் செய்யவேண்டும். ஸ்நானம் செய்யத்தொடங்கும் முதல் தினத்திலே முப்பது நாளும் ஸ்நானம் செய்கிறேனென்று சங்கல்பம் செய்து ஸ்நானத்துக்கு ஆரம்பிக்கவேண்டும். ஸ்நானமுடிந்தபின் பிராமண போஜனமும் தம்பதி பூஜையும் செய்யவேண்டும். தானமும் செய்யவேண்டும். போர்வை தானம் உத்தமம். இங்கே கூறப்பட்டவைகளெல்லாம் காமிய ஸ்நானங்களாம்.

மாகசுக்லஸப்தமிக்கு ரதஸப்தமி என்று பேர். இது வெகு விசேஷ தினம். இத்தினம் அருணோதய காலத்தில் ஏழு எருக்கிலைகள், அது கிடைக்காவிட்டால் இலந்தை இலைகளை தலைமேலே வைத்துக்கொண்டு, அதன்மேல் பசுவின் சாணத்தினால்செய்த பிள்ளையாரையும் அதன்மேல் அறுகம் புற்களையும் அக்ஷதையையும் வைத்துக்கொண்டு அருணோதய காலத்தில் ஸ்நானம் செய்யவேண்டும். இந்தத்தினம் சூரிய கிரகணத்துக்குச் சமானமாகும். இவ்வாறு செய்யப்படும் ஸ்நானம் கோடிபங்கு புண்ணியந்தரும். இதில் செய்யப்படும் தர்ப்பணம் வெகு பலன்தரும். இன்றுதினம் ஸ்நானம் செய்தபின் சூரி

யனை ஆராதிக்கவேண்டும். பால் பழம் சர்க்கரைப்பொங்கல் வெண்பொங்கல் இவைகளை நைவேத்தியம் செய்யவேண்டும். அன்னதானமும் செய்யவேண்டும். பிறகு புத்திரமித்திர பந்துவர்க்கங்களுடன் போஜனம் செய்யவேண்டும். ஒருவேளை புசிப்பதே உத்தமம். இரவு உபவாஸமிருக்கவேண்டும்.

(தொடரும்) சிவானந்தசாகர யோகீஸ்வரர்.

---

## தனக்கும் மிஞ்சித் தருமம்.

(70-ம் பக்கத் தொடர்ச்சி.)

சென்ற ஆவணி வெளியீட்டில் " தனக்கு மிஞ்சித்தருமம் " என்பது " தனக்கும் மிஞ்சித்தருமம் " என்று தான் இருக்கவேண்டு மென்பதைப் பற்றிச் சிறிது கூறினும். இப்போது " தனக்கும் மிஞ்சித்தருமம் " என்புதைப்பற்றியுஞ் சிறிது புகல்வாம்.

மேற்கூறியுள்ள பழமொழிக்கு "தன் உயிரே பிரிவுறவேண்டிய சமயம் நேரினும் பிறர்க்குதவி செய்யவேண்டும் பொழுது அதையும் பொருட்படுத் தாமற் செய்ய வேண்டுவதே தருமமாகு" மென்று பொருள் போதரும்.

இம்மகிதலத்தில் உயிரோடு வாழும் ஒவ்வொருவரும் தம் உயிர் பிரிந்த பிறகு, சாந்தியடைவதற்குத் தருமஞ்செய்வதே இயல்பாக நிகழ, தம் உயிர்க்கே ஆபத்தைத் தேடிக்கொண்டு பிறர்க்கு யாங்ஙனம் தருமமியற்ற முடியும் ? என்று பலர்க்கும் ஐயமுண்டாகலாம். ஒவ்வொருவருடைய உயிரும் இன்ன தன்மையுடையது, அஃது இம்முறையான் நமக்குச் சொந்தமுடையது, இவ்வுயிரின் கனகனம் இன்ன அளவிலுள்ள தென்று இதுவரையிலும் இல்லறவாசிகளாக வாழ்ந்துவரும் எம்போன்றார்க்கு விளங்கிற்றின்று. ஆகவே ஒவ்வொருவருடைய உயிர்க்கும், உடம்புக்கும் யாதொருபந்தமும் இல்லை. ஒரு கூட்டிற்குள் இருக்கும் பறவை அக்கூட்டைத் தனிப்படுத்தி, அதைவிட்டுப் பறந்து விடுமாபோல் உடலைவிட்டு உயிர் பிரிந்துவிடுவது இயற்கையேயாம். ஆன்மசொரூபமாக விளங்கும் ஒவ்வொருவருக்கும் தத்தம்தேகம் என்றிருப்பினும் அழிவடையக் கூடியதே என்ற நீதியானது அறிவுச்சுடர் கொளுத்த வேண்டியதே.

அன்புருவாய்த் திகழும் அன்பர்கட்கோவெனிற் றத்தம் தேகத்தினிடமாக யாதொரு பற்றையுங்கொள்ள இடமின்றி வாழ்ந்துவா அவர்கள் மேன்மை பொருந்திய அறிவு நிச்சயப்படுத்தி விட்டது. அன்னோர்கள் எஞ்ஞான்றும் தம்முடைய பயன்கருதி யாதொரு நிகழ்ச்சியையும் புரிவதில்லை. பிறவுயிர்கட்கு நன்மைசெய்வதையே அவர்கள் தமக்கு அணிகலனைப் பூண்டுள்ளவர்கள். அதனால் பிறருடைய நன்மையின்பொருட்டுத் தம் எலும்பையும் கொடுக்கக்கூடியவர்கள். உலகவிருளை யடியோடு நீக்கி, உலகத்தார்க்கு இன்பத்தை யுண்டாக்கும் நிலாவுந் தன்னிடம் பொருந்தி யிடைவிடாதிருக்குங் களங்

கத்தை நீக்கிக்கொள்ள முயற்சிப்பதில்லை. அங்ஙனமே, அறிஞர்கள் தங்குறைகளைத் தீர்த்துக் கொள்ளாமல், பிறருக்குண்டாகும் வெம்மையான நோய்களை நீக்கத் தம் உடல், பொருள், ஆவி இம்மூன்றையு முதவுவர்.

> "தங்குறை தீர்வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்
> வெங்குறை தீர்க்கிற்பார் விழுமியோர்—திங்கள்
> கறையிருளை நீக்கக் கருதா துலகி
> னிறையிருளை நீக்குமே நின்று"

என்பர்மேலோர். ஆகவே அறிவாளிகள் பிறருடைய நன்மைக்காகப் பாடுபடும் பொழுது தம்மைப்பற்றிக் கவனிக்கமாட்டார்களென்பது இங்குப் பெறப்பட்டது. இது நிற்க, "தனக்கும் மிஞ்சித்தருமம்" என்பதைப்பற்றி நாம் ஆராயுமிடத்து அதற்குவேண்டிய பொருள்களைத்தர, பெரியோர்களுடைய நூல்களைக்கொண்டு ஆதாரம் காட்டவேண்டுவது இன்றி யமையாததே யாயினும், சாதாரணமாக நம் துகர்ச்சியினிடையே நடைபெறும் பலவித சந்தர்ப்பங்களைக்கொண்டு காட்டுவதும் நன்றேயாம்.

ஒரு ஆற்றில் ஒருவன் அடித்துக்கொண்டு போகப்பட்டால் அவனைக் கண்டமற்றொருவன் அடித்துக்கொண்டு போகப்படுபவன்மேல் இளகியமனங்கொண்டு அவனைக் காப்பாற்ற, தானும் ஓர்சமயம் அதில் குதித்து அவனைக் கொண்டுவர முயற்சி செய்யும்பொழுது, ஆற்றில் விழுந்தவனைக் காப்பாற்றிக் கொண்டு வந்தாலும் வருவான்; அன்றித் தானும் அவனுடன் அடித்துக் கொண்டு போகப்பட்டாலும் படலாம். இதைப்போலவே தீபற்றிக்கொண்டு எரியும் ஒரு வீட்டில் அகப்பட்டுள்ளவரைக் காப்பாற்ற முன்வந்து அவ்வீட்டினுள் புகுந்து அங்கிருந்தவர்களையுங் காப்பாற்றாமல் தாங்களும் அவர்களுடன் அதனுள் அகப்பட்டுத் தீக்கிரையாயினோர் பலர். இதுவுந்தவிர, ஒவ்வொருவருடைய தாய்நாட்டிற்குச் சில சமயங்களில் ஆபத்து நேரும்பொழுது எவ்வளவோ பெயர்கள் தம் உயிரைத் திரணமாகமதித்துத் தேசத்திற்காகப் பாடுபட்டுச் சண்டைசெய்து தம் உயிரையிழந்து வீரசுவர்க்கம் புகுந்தனர். இன்னும் இவைபோன்ற பல செயல்களை நாம் புகலலாமாயினும் இவ்வளவோடு நிறுத்துவோம். இவைகளைச் செய்யும் அன்பர்கள் தம் உயிருக்குப் பயப்படாமல் அதுபோனாலும் போகட்டுமென்று துணிந்து பரோபகாரார்த்தமாகத் தேகதர்மஞ்செய்திருக்கின்றனர். "தனக்கும் மிஞ்சித்தருமம்" என்பதற்குப் பெரியோர்கள் சரித்திரங்கள் வேண்டுமாயினும் இவண் இரண்டொன்றைக் குறிக்கலாம்.

(க) **குமணன்:**—தமிழில் செய்யுளியற்றும் புலவோர், தம் மேற் பாடல் செய்துகொண்டு வந்தால் அவர்களுக்குக் கணக்கின்றிக் கொடுத்த வள்ளல்களில் குமணச் சக்கரவர்த்தியும் ஒருவர். அவர் வள்ளன்மையைக்கண்ட அவர் தம்பி, அவரைக்கொல்லச் சூழ்ச்சிசெய்தான். இதையறிந்த குமணவள்ளல் புறவுபுகுந்து மறைந்திருந்தார். அக்கால் அவர்மீது ஒரு புலவர் பாடல் புனைந்துகொண்டுவந்து அவரை விசாரித்து, அவர் காட்டில் இருப்பதாகக் கேள்

விப்பட்டு, அவண் நெருங்கி, அப்பாடலை அவர் திருமுன் வைத்தார். அவரும் அதை வாசித்தின்புற்று, "ஐயா புலவரே! நீர் யான் ஆண்டிருந்தபோது வந் திருப்பின் எவ்வளவோ பொன்பெறலாம்; ஆயினும் பழுதில்லை; என் தலையை வெட்டிக்கொண்டு செல்பவர்கட்கு ஐயாயிரம் பொன் பரிசளிப்பதாக என் தம்பி நவின்றுள்ளான். அங்ஙனமே நீர் என்றலையை வெட்டிக்கொண்டுபோய் அவனிடம் கொடுத்து அத்தொகையைப் பெற்று உமது மிடியைத் தீர்த்துக் கொள்ளும் என்னும் கருத்தமையப் பாடல் ஒன்று கூறினர். அதாவது:—

"அந்தநாள் வந்திலை யருங்கவிப் புலவோய்
இந்தநாள் வந்துநீ நொந்தெனை யடைந்தாய்
**தலைதனைக் கோடுபோய்த்** தம்பிகைக் கொடுத்து
விலைதனைக் கொண்டுன் வெறுமைநோய் களையே" என்பதாம்.

இதில், குமணச் சக்கரவர்த்தி புலவருடைய வறுமைநோயைக் களைவதற் குத் "தலைதனைக் கொடுபோய்" என்று கூறியவிடத்தை நோக்குங்கால் "தனக்கும் மிஞ்சித்தருமம்" என்பது தானே பெறப்படும்.

(உ) **கன்னன்:**—பாரதப்போர் நடந்தபொழுது பதினேழாம்நாள் சண் டையில், கேட்டோர்க்கில்லை யென்னுஞ்சொல்லை யுரையாத கன்னன், விஜய னுடைய அம்புகளால் உடல்முழுதுந் தைப்புண்டு, குருதிபாயக்கிடந்தபோது கார் எழிலிபோன்ற கருநிறவண்ணன் அர்ச்சுனனை, செருச் செய்யற்க, வென்று நிறுத்தி, தான் உண்மையான அந்தணவடிவுடன் கன்னனையணுகி,

"தாண்டிய தரங்கக் கருங்கட லுடுத்த தரணியிற் றளர்ந்தவர் தமக்கு
வேண்டிய தருதி நீயெனக் கேட்டேன் மேருவி னிடைத்தவம் பூண்டே
னீண்டியவறுமைப் பெருந்துய ருழந்தேனியைந்ததொன்றிக்கணத்தளிப்பாய்
தூண்டியகவனத் துரகதத் தடந்தேர்ச் சுடர்தரத் தோன்றிய தோன்றால்"

என்று புகழ்ந்துரையா நிற்க, அதைக்கேட்டுக் கன்னன் "உமக்கென்ன வேண்டு"மெனலும், கண்ணன் "நீ புரிந்துள்ள புண்ணிய மனைத்து முதவுக" என்றியம்பினன். அதைச் செவியேற்றக் கன்னன் உளமகிழ்ந்து,

**"ஆவியோநிலையிற் கலங்கியதியாக்கை யகத்ததோ புறத்ததோ வறியேன்**
பாவியேன்வேண்டும் பொருளெலாநல்கும் பக்குவந் தன்னில்வந்திலையா
லோவிலாதியான்செய் புண்ணியமனைத்து முதவினேன் கொள்கநீயுனக்குப்
பூவில்வாழயனு நிகரிலனென்றாற் புண்ணிய மிதனிலும் பெரிதோ"

என்று கூறித் தன் உடலிற்றைத்திருந்த அம்புகளிலொன்றைப் பிடுங்கி, அவ் விடத்தினின்றும் வெளிப்பட்டகுருதி மூலமாகத் தாரைவார்த்துக் கண்ண பிரானுகிய அம்மறையவர்க்குத் தான் இயற்றியுள்ள புண்ணிய மனைத்தையு முதவினுன்.

இதிலும் "ஆவியோ நிலையிற் கலங்கியது" என்று கூறியுள்ள இடத்தை நோக்கும்போதும் "தனக்கும் மிஞ்சித்தருமம்" என்பது தானே போதரும்.

இன்னும் இவைபோன்றே சிபிச்சக்கரவர்த்தி முதலியவர்கள் சரித்திரங்களும் இதற்கு உதாரணமாக வெடுத்துக் கூறலாமாயினும் விரிவஞ்சி அவற்றை விடுத்தனம்.

ஆகலின் "தனக்குமிஞ்சித் தருமம்" என்பது மேலோருடைய நூற் கருத்துக்களுக்கும் சரித்திரங்களுக்கும் பொருந்தாததென்பதும், "தனக்கும் மிஞ்சித்தருமம்" என்பதே பெரியோர்களால் வழங்கப்பட்ட பழமொழியாகு மென்பதும் எமது சிற்றாராய்ச்சியிற் கிடைத்தனவாகும். அறிவிற்சிறந்த அன்பர்கள், "தனக்கும் மிஞ்சித்தருமம்" என்பது பொருந்தாதென்று கூறி, அதற்கு மேலோர்களுடைய நூற்கருத்துக்களையும், சரித்திரங்களையு மெடுத்துக்காட்டி யிதற்கு மறுப்பெழுதினும் அதைமனப்பூர்வமாக ஏற்றுக்கொள்ளலாகும். ஆனால் அம்மறுப்பு அறிஞர்கள் நூற்கருத்துக்கொப்ப, ஒத்துக்கொள்ளக் கூடியதாக இருக்கவேண்டும்.

மு. மாணிக்க நாயகர். தமிழாசிரியர், திருப்புவனை, புதுவை.

## ஞானப் பகுதி.

### வேதாந்த சாரசங்கிரக வசனம்.

(175-ம் பக்கத் தொடர்ச்சி.)

#### சாதனசதுஷ்டயம்.

(அநுபந்த சதுஷ்டயத்தில் முதலாவதாகிய அதிகாரியின் லக்ஷணங்களு ளொன்றாகிய சாதன சதுஷ்டயத்தைக் கூறத் தொடங்கி அதன் அத்தியாவசியத்தை முதலிற் கூறுகிறார்.)

சாதன சதுஷ்டயத்தை அடைந்துள்ளவனே பந்த நிவர்த்திவடிவமோக்ஷ மாகிய பரமப்பிரயோசனத்தை யடைவன். அவற்றுள் சிறிதேனும் குறைந் திருப்பினும் அந்தப்பிரயோசனத்தை அடையவியலாது. (சாதனங்கள் நான் கையும் அடைந்திராதவன் வேதாந்த விசாரத்திற்கு அதிகாரியாகான். சாதன மில்லாமல் எக்காரியமும் சாத்தியமாகாது. "சாதனமின்றி யொன்றைச் சாதிப் பாருலகில் இல்லை. ஆதலால் இநதநான்கும் அடைந்தவர்க் கறிவுண்டாகும்" என்று கைவல்லிய நவநீதமும்,

"மேலாஞ் சதுட்ட சாதனங்கள் மேவி நிறைந்த பேர்க குரைக்கின்
மேலா மதுநா மெனத்திடமாய் விளங்கு மவையில் லாதவர்க்கு
மேலாம் பரமன் மான்மழுவாய் விளங்கி யுரைத்தும் விளங்காது"

என்று அத்துவித வுண்மையும் கூறுகின்றன.)

எந்தச் சாதனங்களை யடைவதால் மோக்ஷம் சித்திக்குமோ, எந்தச்சாத னங்களில்லா விட்டால் முத்தி சித்திக்கமாட்டாதோ அந்த மோக்ஷசாதனங் கள் நான்கென்று பெரியோர் கூறுவர்.

**நால்வகைச் சாதனங்களாவன:**—இது நித்தியவஸ்து, இது அநித்திய வஸ்து என்று பகுத்தறியும் விவேகமே முதற் சாதனமாம்; இகலோகத்திலும் பரலோகத்திலுமுள்ள பதார்த்தங்களை அனுபவித்தல் வேண்டு மென்னும் எண்ணம் இல்லாதிருத்தலே இரண்டாஞ் சாதனம்; சமம், தமம், திதிக்ஷை, உபரதி, சிரத்தை, சமாதானம் என்னும் இவ்வாறையும் அடைந்திருத்தல் மூன் ருஞ்சாதனம்; மோக்ஷத்தை யடைதல்வேண்டும் என்னும் இச்சை நான்கா வது சாதனம்.

(சாதன சதுஷ்டயங்கள் இவை எனவகுத்துக் கூறியவற்றைப் பின்விரித் துக் கூறுகின்றார்.)

(1) **நித்தியா நித்தியவஸ்து விவேகம்:**—(நித்திய × அநித்திய × வஸ்து × விவேகம்) "பரப்பிரம்ம மொன்றே நித்தியமானது; அதற் கன்னியமானவை யாவும் அநித்தியம்" எனத் தெரிந்துகொள்ளுதல் நித்தியா நித்தியவஸ்து விவே கம் எனப்படும்.

(பிரம்மம் ஒன்றே நித்தியம்; மற்றையவை அநித்தியம் என்பதை நிரூபிக் கும் பொருட்டு நித்திய அநித்தியங்களின் லக்ஷணம் கூறப்படுகிறது) (எங்கும் எப்பொழுதும் காரணமின்றிக் காரிய முண்டாகாது என்பது நியதி. காரணம் காரியம் என்னும் இவ்விரண்டில் காரணமே இறந்தகாலம், நிகழ்காலம், எதிர் காலம் என்னும் முக்காலத்துமுள்ளது; காரியம் இறந்த காலத்தும் எதிர்கால த்தும் இல்லாமல் நிகழ்காலத்து மட்டு மிருப்பது. நிகழ்காலத்திலும் வெறும் பெயரும் தோற்றமு மாத்திரமாகவே யிருப்பதன்றிப் பொருளாக இராதது. எனவே காரியமானது அழியுந்தன்மை யுடையது.) திருஷ்டாந்தமாக:—

குடம் காரியம்; மண் காரணம். குடத்திற்குக் காரணமான மண்ணனது குடம் வனையப்படாததற்கு முன்னும் குடம் உடைந்த பின்னும் உள்ளது. குடமாகவுள்ளது நிகழ்காலத்தும் குடம் என்னும் பெயரும் தோற்றமு மாத்திர மாகவுள்ளதே யன்றி, அந்த நாமரூபங்களைத் தள்ளிப் பார்க்குமிடத்து நிகழ் காலத்திலும் கூட குடம் என்னும்பொருள் காணப்படுவதின்று. ஆகையால் காரணமே முக்காலத்து முள்ளதென்றும், காரியம் முக்காலத்து மில்லாத தென்றும் விளங்குகின்றது. அதுபோலவே, தாஷ்டாந்தத்தில்:—

சராசரவடிவப் பிரபஞ்சம் காரிய வடிவாயுள்ளது; இதற்குக் காரணமா யுள்ளது பரப்பிரம்மம். ஆகையால் உலகம் (காரியமாகிய குடம் முதலியவற் றைப்போல்) அநித்தியம். உலகத்திற்குக் காரணமான பரப்பிரம்மம் மண்முத லியவற்றைப்போல நித்தியமானதாகும்.

(உலகம் காரியம், பிரம்மம் காரணம். ஆகையால் பிரம்மம் ஒன்றே நித்திய மானது; உலகம் அநித்தியமானது என்பதை வேதப்பிரமாணத்தாலும் அநு மானப் பிரமாணத்தாலும் நிரூபிக்கிறுர்.)

சுருதியானது 'பரப்பிரம்மத்திலுல் உலகம் உண்டாயிற்றெனக் கூறுகின் றது. இப்படிப் பிரம்மத்தின் காரியமா யிருத்தலால் உலகம் அநித்திய மென்ப தில் சந்தேகமில்லை. மேலும், சர்வ சகத்துக்களும் அவயவங்களோடு கூடிய வையா யிருத்தலாலும் அநித்திய மென்பது விளங்குகின்றது. அங்ஙனமாக, சிலர் வைகுண்டம் முதலாகிய உலகங்கள் நித்தியமானவை என்றெண்ணுவது மயக்க புத்தியேயாகும். (எதுஎது அவயவமுடையதோ, அது அது காரிய மாகும் என்னும் அனுமானத்திலுல், எல்லாமும் அவயவத்தோடு கூடியவை யாகையால் அனைத்தும் அநித்தியமென்பது பெறப்படுகின்றது. வைகுண்டம் முதலிய உலகங்களும் அநித்தியமே. அவை நித்தியமானவை என்றெண்ணு வது பிராந்தியே யாகும்.)

இப்படிச் சுருதியுக்திகளால் நித்தியவஸ்து இது, அநித்தியவஸ்து இது என்று நித்திய வநித்தியங்களை வேறுபிரித்தறிதலே நித்தியாநித்திய வஸ்து விவேகம் என்னப்படும்.

(2) இகமுத்திரார்த்த பலபோகவிராகம் :—இகலோக பரலோகங்களி லுள்ள பொருள்களினிடத்து இவற்றை யனுபவிக்கவேண்டுமென்னும் விருப்ப மற்றிருத்தல்.

முதற்சாதனமாகிய நித்தியாநித்தியவஸ்து விவேகத்தால் பிரமம் ஒன்றே நித்தியப்பொருள்; மற்றவை அநித்தியம் என்று நிச்சயிக்கப்படுவதால் அத் தகைய அநித்தியமாகிய இகலோக பரலோகங்களிலுள்ள பொருள்களி னிடத்து இவற்றில் சுகமுளது; இவற்றை அனுபவிக்கவேண்டு மெனக்கருதி வாஞ்சை கொள்ளாமல், அவற்றை வெறுக்கத்தக்க இழிவானபொருள்களாகப் பார்த்து ஆசை கொள்ளாம லிருத்தல் இகமுத்திரார்த்த பலபோக விராக மெனப்படும்.

(இது விராகம் என்றும் வைராக்கிய மென்றும் சொல்லப்படுவதுமுண்டு) ஒருவனுக்கு நித்தியாநித்திய வஸ்து விவேகம் உண்டான அக்கணமே புஷ் பம் சந்தனம் ஸ்திரீமுதலான அநித்தியப் பொருள்களெல்லாவற்றினிடத் தும் வைராக்கியம் உண்டாகின்றது. காக்கையின் மலத்தைக்கண்டு அதனி டத்து வெறுப்புக் கொள்வதுபோல, இகலோக பரலோகப் பொருள்களி னிட த்தும் வெறுப்புக் கொள்ளல் உத்தமமாகும். இத்தகைய வைராக்கியத்திற்குத் தீவிர வைராக்கிய மென்றுபெயர். நாம் அனுபவிக்கும் சகல பொருள்களும் தோஷமுள்ளவை யென்று அவற்றைத் தோஷதிருஷ்டியோடு பார்ப்பதால் தீவிரவைராக்கிய முண்டாகும். ஒரு வேசியானவன், அதிரூபலாவண்ணிய முடையவளாகக் காணப்பட்டாலும், அவளைக்கண்ட ஒருவன் அவள் உள்ளே அதிபயங்கரமான வியாதிகளையுடைய வள் என்று அறிவானுனுல், அவளுடைய

வெளி அழகைக்கண்டும் ஆசைகொள்வானோ? கொள்ளமாட்டான். அது போல, ஒருவன் ஒருபொருளில் தோஷமிருப்பதாக அறிந்தால், மறுபடியும் அவனுக்கு அப்பொருளினிடத்து விருப்பமுண்டாகாது. ஆகையால் போக வஸ்துக்களிலுள்ள குணதோஷங்களை யறியவேண்டுமானால் அவற்றின் உண் மையானஸ்திதியை ஆராய்ந்து பார்க்கவேண்டும். அவ்வாறு பார்த்தால் அவற்றி னிடத்துள்ள தோஷங்கள் வெளியாகும். அவ்வாறு பார்க்காவிடத்து வெளி யாவதில்லை. (தொடரும்)

பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப்பண்டிதர், சித்தூர்.

# சுயமொழிப் பகுதி.

## வியாச மெழுதுதல்.

(169-ம் பக்கத் தொடர்ச்சி.)

வியாச மெழுதுதற்குரிய நடை கருத்துக்கொத்ததா யிருத்தல் வேண்டும். நுண்ணிய கருத்துக்களை எளியநடையில் அமைப்பதனால் அக்கருத் துக்கள் வாசகர்கட்கு நன்குவிளங்கும். எளிய கருத்துக்களை இலக்கணச் சுவைபட அமைத்தலினால் வியாசம் சிறிது அழகுபெறும். ஆயினும், ஒரே வியாசத்தில் பலவகைப்பட்ட நடைகளை அமைத்தல் அதன் மேன்மையைக் குறைப்பதாகும். சில வியாசங்கள் மாணவர்க்கும் ஆசிரியர்க்கும் ஒருங்கே பயன்படாதனவா யிருக்கின்றன. அவற்றில் மாணாக்கர்களுக்குப் புலப்படா தனவும் ஆசிரியர்க்கு மிக வெளிவாய்த் தோன்றுவனவு மாய கருத்துக்களும் சொற்களும் அமைந்து கிடக்கின்றன. ஒரு வியாசம் எழுத முற்புகும் பொழுதே இஃது இன்னவாறு பிறர்க்கு உதவல் வேண்டும் என்பதை உட் கொண்டு அதற்கிசைந்த சொற்களையும் கருத்துக்களையும் அமைத்து எழுது தல் வேண்டும்.

வியாசநடை வாசகர்கட்கு உளச்சோர்வைப் பயப்பதா யிருத்தல் கூடாது. வாக்கியங்களைப் பழங்கதைகளைப்போல் மிகவும் நீட்டி எழுதுதல் கூடாது. ஒருவருள்ளத்தில் நிலைபெறத்தக்க தன்மையில் வாக்கியங்கள் இயற் றப்படல் வேண்டும். நெடிய வாக்கியங்களை அருகிப் பயன்படுத்திக்கொள் ளல் வேண்டும். மிக்க குறுகிய வாக்கியங்களும் இடையிடையில் சேர்க்கப் படின் வாசகர்கட்கு மனக்கிளர்ச்சியை உண்டுபண்ணும். ஆங்காங்குச் சில கருத்துக்களைப் புலப்படுத்தவேண்டிய வினாக்களை எழுப்புதலும் மனச் சோர்வை முற்றிலும் நீக்கும். சிற்சிலவிடங்களில் அவற்றிற்கு விடையளிக் காமல் வாசகர்களே உணர்ந்துகொள்ளுமாறு வைத்தலும் வியாசத்தின்கண் வாசகர்க்கு விருப்பை உண்டுபண்ணுவதாகும். இவ்வாறு சுவைபட எழுதும் பொழுது பிறபாஷைச் சொற்கள் புகாமற் காத்துக்கொள்ளல் வேண்டும்.

வடமொழிச் சொற்கள் தோன்றுதொட்டே தமிழிற் கலக்கத்தொடங்கியமையின் அவற்றுள் மேலோரால் எடுத்தாளப்பட்ட சொற்களைத் தமிழிலக்கண முறைப்படி அமைத்து எழுதுதல் குற்றமாகாது. அஃதேபோல முன்னோரால் எடுத்தாளப்பட்ட 'அந்தோ' 'பாண்டில்' முதலிய திசைச்சொற்களும் நீக்கற்குரியன வல்ல. ஆனால், 'தயார்' 'ஜன்னல்' முதலிய சொற்களை நீக்கத் தகுமிடத்தில், நீக்கல் நன்று. தயார் முதலிய சொற்கள் நமது தொன்னூல்களின்கண் காணப்படுவது இல்லை. தமிழ்ச்சொற்களினுள்ளும் 'அஞ்சு' 'போறேன்' முதலிய சிதைந்த சொற்கள் நீக்கத் தக்கனவே. இச்சொற்கள் செய்யுட்களிற் சிறுபான்மை வரும் 'அஞ்செழுத்து' 'என் கெட்டுப் போருனிவன்' எனச் சான்று காண்க. இவற்றை வியாசங்களிற் புகுத்துவது மேன்மையான முறையன்று.

வியாசஙகளில் இன்றியமையாத சிறுகதைகள் வரைதல் வாசகர்களுக்கு மேன்மேலும் இன்பத்தை விளைக்கும். ஆயினும் வேண்டாத இடங்களில் அவை வரையப்படின் வியாசத்தை முற்றிலும் இழிவுபடுத்தும். ஆனால், பழமொழிகளும், ஆன்றோர் வழங்கிய தொடர்களும் உவமைகளும் மேற்கோட் செய்யுட்களும் அன்ன பிறவும் கட்டுரையிற் பொலிந்துதோன்றல் அதை மேன்மைப்படுத்துவதோடு கட்டுரையாளரது பயிற்சி அறிவையும் விளக்குவதாம். பழமொழிகளாவன 'கையிலிருப்பது ஜபமாலை கக்கத்திலிருப்பது கன்னக்கோல்' 'திக்கற்றவர்க்குத் தெய்வமேதுணை' என்பன போல்வன. ஆன்றோர் வழங்கிய தொடர்களாவன 'சில் வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவினர்,' 'நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமும்' என்பன போல்வன. உவமைகளாவன 'பொன்னேபோல்' 'குன்றுமுட்டிய குரீஇப் போல' என்பன போல்வன. மேற்கோட் செய்யுட்கள் பொறுமையைப்பற்றிக் கூறுமிடத்து 'அகழ்வாரைத் தாங்கு நிலம்போல்' எனவும், அறிவைப்பற்றிக் கூறுமிடத்து 'அறிவுடையா ரெல்லா முடையார்' எனவும் கூறப்படுவன போல்வன. அவை ஆன்றோர் செய்த செய்யுட்களாம். பிறவும் ஆய்ந்துணர்ந்து கொள்க.

வியாசமெழுதுவோர் சொற்களைப் பிரிக்கவேண்டுமிடத்துப் பிரித்துத் தெளிவுபட எழுதுதல் வேண்டும். 'ஈசன் திரிபுர மெரித்தான்' என்பதற்கு 'ஈசன்திரிபுர மெரித்தான்' என எழுதுதல் கூடாது. அங்ஙனமெழுதின் ஈசனதுதிரிபுரமெனப் பொருள்பட்டு ஐயத்திற் கிடனும். செய்யுளிலாயின் இவ்வரையறை யின்று. 'நிலமிசை நீடுவாழ்வார்' எனப் பிரித்து எழுதுதலும் தகும். இவ்வாறு வருவதனை வகையுளி என்பர்.

மேற் கூறப்பட்ட முறைகளை நன்கு உளங்கொண்டு எழுதப்படும் வியாசமே மேலோரால் கொள்ளத் தகுந்ததாம். சிலர், இலக்கண இலக்கியப் பயிற்சியின்றித் தமக்குத் தெரிந்த இரண்டொரு சொற்களை இலக்கண வழுக்களுக்கு வழுவின்றி அமைத்துக் கட்டுரை எழுதுகின்றனர். பற்பல கட்டுரைகளைப் பயில்வதனால் சிற்சில இலக்கணக் குறிப்புகள் தென்படுமெனினும் அவற்றைக்கொண்டு வியாசமெழுதத் தொடங்குதல் சிறு திமிலைக்கொண்டு கட

லக் கடக்க முற்படுவதுபோலாம். இயல்பாய் வரத்தக்க சில இலக்கண வழுக்களைமட்டும் ஈண்டுக் குறிக்கின்றேம். அப்பொருட்கள் முற்றும் ஒழியாது என்பதில் பொருட்கள் என்பது பன்மையாயிருக்க 'ஒழியாது' என ஒருமை வந்து வழுவாயிற்று. ஒழியா வெனப் பன்மையாற் கூறலே பொருத்தமாம். அவர்கள் தானகவே பேசிக்கோண்டார்கள் என்பதில் தாமாகவே என்பதே பொருத்தமாம். சொற்களை பிரித்து என்பதில் புணர்ச்சி வழுக்காண்க. சொற்களைப் பிரித்து என வெழுதுதலே பொருத்தமாம். இராமனும் சீதையும் வந்தான் என்பதில் பால்வழுக் காண்க. வந்தார்கள் என்பதே முறையாம். முன்னும் பின்னும் போருந்தாது மாறுபாடாயிருக்கிறது என்பதில் போருந்தாது என்பது நீக்கற்குரியது. நான் வருவேனுயினும் போதுபோனமையால் அவனைக் காணவில்லை. இதனை, நான் வருவேனுயினும் போதுபோனமையால் வரவில்லை; அன்றியும், அவனைக் காணவில்லை என எழுதிக் காண்க. இத்கைய முரண்பட்ட சொற்றொடர்கள் சில வியாசங்களிற் காணப்படுகின்றன. அவற்றை முற்றிலும் நீக்கி வழுவின்றி எழுதுவதே பொருத்தமாம். சிலர் கருத்திற்குத் தகுந்த தொடர்களை அமைக்க இயலாமற் பொருள் விளங்காத தொடர்களை அமைத்துவிட்டுத் தங்கருத்தை நிறுவியதாக நினைக்கின்றார்கள். அஃது பயிற்சிக் குறைவினல் உண்டாவதாகும். ஆராய்ந்து அமைதியாய் எழுதுவோர்க்கு அத்தகைய வழுக்கள் உண்டாகா. சிலர் பத்திபிரித்தெழுதுவதே இல்லை, இதனுல் கருத்துக்கள் வாசகர்களுக்கு நன்கு விளங்குவதில்லை. ஒவ்வொரு பத்தியிலும் ஒவ்வொரு வகைப்பட்ட கருத்துக்களே இருத்தல் வேண்டும். பயனின்றிப் பத்திகளை விரித்தலாகாது. வியாசங்களை முடிக்கும்போதும் தொடக்கத்திற்கேற்ப முடித்தல் வேண்டும். முடித்தபின்னரும் வியாசம் முடிவுறாததுபோலத் தோன்றுதல் கூடாது. தொடக்கமும் முடிவும் அத்துணைப் பொருத்தமாக விருத்தல் வேண்டும். இன்னும் இதிற் கூருதவைகளை ஆராய்ந்தும் வல்லார்வாய்க் கேட்டு முணர்ந்து கொள்க. ஈண்டு விரிக்கிற் பெருகுமென்க.

ராமசுப்பிரமணிய நாவலர், பத்திரிகாசிரியர், விசால ஹிருதயம்.

# கைத்தொழிற்பகுதி.

## இந்தியநாடும் கைத்தொழிலும்.

ஓர் நாடு சிறப்படைய இன்றியமையாத சாதனங்களான கல்வி, கேள்வி, சிற்பம், இசை, நாகரீகம் முதலானவற்றுள் கைத்தொழிலு மொன்ருகும். கைத்தொழிலாவது உள்நாட்டிற் கிடைக்கத்தக்க விளை பொருள்களைக் கொண்டு ஜன சமூகத்திற் கவஸ்யமான சாமான்களை உற்பத்திசெய்தலாம். கைத்தொழிலின் விருத்திக்கு, இயற்கையான விளைபொருள்கள், மூலதனம்,

தலைமையாயிருந்து நடாத்தும் தன்மை, தொழில் தந்திரம், பொதுஜன ஆதரவு, நிலவரவிலை, ஏற்றுமதி இறக்குமதிசெய்யும் சுதந்திரம், மனமார்ந்த உழைப்பு முதலாயின அத்தியாவசியமான சாதனங்களாகும். ஒரு நாட்டில் மேற்கூறிய சாதனங்களெல்லாம் ஒருங்கே யமையுமாயின் அந்த நாடு 'கைத்தொழிலில்' மேன்மை யடைவதில் யாதொரு சந்தேகமு மின்றாம்.

நிற்க, நம்நாட்டுக் கைத்தொழிலைச் சற்று ஆராய்வாம்: சுமார் இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்னர் பாரதநாட்டின் கைத்தொழிற் சிறப்பு உலகெங்கும் உலாவித் திரிந்ததென ஆராய்ச்சியில் வல்லார் கூறுவர். இதனால் நம்நாட்டு ஆடைகள் அதிகம் புகழ்ப்பெற்றதெனப் புலனாகின்றது. சிந்து நதி பாயும் பிரதேசங்களிலும், கங்காநதிதீரத்திலுள்ள சில முக்கிய இடங்களிலும், தெற்கே, கிருஷ்ணா, கோதாவரி நதிகள் பாயுமிடங்களிலும் பருத்திவிளைவு அதிகமாதலால் அவ்விடங்களில் பருத்தி ஆடைகள் செய்யப்பெற்றன. மசூலிப் பட்டினத்தில், 'நீலி'ச் சாயமிடப்பட்ட ஆடைகளும், வங்காளநாட்டில் மிகவும் மெல்லினமான (மஸ்லின்) துணிகளும், சூரத்தில் முரட்டுத்துணிகளும், கள்ளிக்கோட்டை முதலான இடங்களில் 'செக்' என்று வழங்கும் துணிகளும், உற்பத்தி செய்யப்பெற்றன. பாளையங்கோட்டை, பரங்கிமலை, முதலான இடங்களிலுள்ளவர்கள் சாயந்தோய்த்த பலவர்ணச் சீட்டித்துணிகளை விருத்தி செய்தனர். இவ்வாடைகளை பாரசீகம், அரேபியா, சிரியா, அபிசீனியா, கிரீஸ், ரோம், ஸ்பெயின் முதலான தேசங்களுக்கு ஏற்றுமதி செய்துவந்தனர். வங்காநாட்டு 'மஸ்லின்' என்னும் வெகு மெல்லிய துல்லிய ஆடைகளைச் சீனர்களும், ரோமர்களும் போற்றி வந்தனர். சீனா, ரோம் முதலான பிரதேசங்களிலுள்ள பெண்மக்கள் மஸ்லின் ஆடையைத் தரித்துக் கொள்வதில் அதிகப் பிரியமுடையவர்களாவர். மற்றும், சீனத்தேசத்தாருக்கு 'டக்கா மஸ்லின்' என்று வழங்குந் துணி அதிகமாக அனுப்பப்பட்டு வந்ததாம்.

இவ்வாறு மேன்மையடைந்த இந்தியநாட்டுக் கைத்தொழில் நமது தென்நாட்டிலும் நனி சிறந்ததென்பர் அறிஞர். ஒவ்வொரு தமிழர் இல்லத்திலும் நூல் நூற்கும் இராட்டை முற்காலத்தில் உண்டு. அவர்கள் ஓய்வு நேரங்களில் இராட்டையால் நூலைப்பெருக்கித் தம்பொழுது போக்குவர். சிலர் அதையே சீவனமாகக் கொள்ளலுமுண்டு. இதைக் குறித்தே "கொட்டை நூற்றுச் சம்பாதித்ததோ" என்ற பழமொழியும் தமிழகத்தில் வழங்கலாயிற்று. தமிழரில்லங்களில் விவாஹம் நடைபெறுங் காலங்களில், நவீனநாகரீகம் முற்படாத நாளில், பெண்ணுக்குச் சீதனமாகக் கொடுக்கும் பொருள்களில் கைராட்டினமும் ஒன்றாம். இந்த அநித்ய உலகில், 'செல்வம்' 'செல்வோம்' என்று முறையிட்டுக்கொண்டிருத்தலின், செல்வங்குன்றி வறுமையுறும் நாட்களில் இந்த இராட்டினத்தையாவது வைத்துக்கொண்டு நூல்நூற்று சீவிக்கலாமென்ற புறப்பொருளையும், உலகமும், செல்வமும், யாக்கையும் நிலையற்றவை—சுற்றுந் தன்மையுடையன—ஆகலான் நல்வழி நின்று வாழ்தலித் தம்பதிகளினறமாம் என்ற அகப்பொருளையும் இவ்வழக்கம் தருவதாகின்றது. இப்பழமையான

வழக்க மின்றும் பல கிராமாந்தரங்களிலிருந்துவருவதை நாம் கண்கூடாகக் காணலாகும்.

இத்துணை மாண்புடைய நம்நாட்டுக் கைத்தொழில் கி. பி. 1769-ம் வருஷத்தில் ஹார்கிரீவ் என்னும் மேல்நாட்டார் கண்டுபிடித்த நூல் நூற்கும் இயந்திரத்தையும், கி. பி. 1779-ம் வருடத்தில் கிராம்டன் என்பார் மற்றொரு வேகமாய் நூற்கும் நீராவிசம்பந்தமான கருவியையும் உபயோகிக்க வாரம்பித்ததாலும், நவீனநாகரீகம் தன் ஆதிக்கம்பெற்றுத் தாண்டவமாட முற்பட்டதாலும், சில உள்நாட்டுக் கைத்தொழில்கள் நசுக்கப்பட்டதாலும், குன்றிப் படுகுழியில் விழலாயிற்று. இயந்திரங்களால் நெய்யப்பட்ட ஆடைகள் அதிகமானதாலும், விலை சரசமாயிருந்த காரணத்தாலும் ஜனங்கள் அவற்றை யாதரித்தனர். மஸ்லின் முதலான துணிகளை நெய்வோர் பெரிதும் கண்டிக்கப் பட்டனரெனவும் கூறுவதுண்டு. இத்தகைய காரணங்களால் உள்நாட்டுக் கைத்தொழில் இறக்கலாயிற்று.

மாண்டுபோன இக் கைத்தொழிற்கு மீண்டும் புத்துயிரளிக்க, சில வருடங்களுக்கு முன்னர், வடநாட்டி லொளிரும் ஓர் ஞானதீபம் ஒளிதந்தது. அவ்வொளியின் சக்தியால் நின்றராட்டை சுழன்றோட வாரம்பித்தது. பலர், உள்நாட்டு ஆடையென்று கதரைப் போற்றி யுடுக்க வாரம்பித்தனர். இக்கதராடை, தன் ஆரம்பகாலத்தில், சற்று சுரசுரப்பாகவிருந்தாலும், பின்பு வெகு நயமான ஆடைகள் இவ்வகையில் நிறைக்கப் பெற்றன; ஜாதி, மத பேதமின்றிப் பொதுமக்கள் இவற்றை ஆதரித்தனர். இதனால் சுழலுமிராட்டையின் வேக மதிகரித்தது. இவ்விதமே சோப், தீக்குச்சி, முதலான கைத்தொழில்களும் சிறிது தலையெடுக்க வாரம்பித்தன; பென்சில், எழுதும் மை தயாரித்தலான தொழில்கள் நமது காருண்ய அரசாங்கத்தாரின் பேராதரவிலும் உத்தரவிலும் நடைபெற வாரம்பித்தன. இவைகளை இடைவிடாது ஆதரித்து ஊக்கல் பாரத மக்களான நமது கடமையாகும். உள்நாட்டுக் கைத்தொழில் வாழ்க! பாரத நாடும் செழிக்க! இறைவனடி போற்றுவாம். வி. ராஜன்.

## வியாபாரப் பகுதி.

### தென் நாட்டு வர்த்தகம்.

தென் நாட்டு வியாபாரத்தைப் பற்றி நாமெழுதப் புகுமுன், பொதுவில் வியாபார மென்பதன் பொருளைச் சற்று ஆராய்வோம். வாணிபமாவது, ஒருநாட்டிலுண்டாகக் கூடியதும், உண்டாக்கக் கூடியதுமான சரக்குகளைப் பிறவிடங்களுக் கனுப்பி, ஆங்கிருந்து நமக்குத் தேவையானவற்றை மாற்றுப் பண்டங்களாகவோ, அல்லது அனுப்பப்படும் சரக்குகளின் விலைக்குத் தக்கவாறு அரசாங்கத்தாரால் வழங்கப்படும் நாணயங்களையோ பெற்றுக்கொள்வது வாணிப மெனப்படும்.

இவ்வியாபாரத்திற்கு அவஸ்யமான சில சாதனங்களுண்டு. அவை, சரக்குகளின் அதிக விளைவு, செழிப்பு, அப்பண்டங்களைக் கொண்டு செல்வதற்கு வண்டி,படகு முதலியனவாம். சமநிலங்களிலோடும் நதிகளின் வாயிலாகப் படகுகளில் சரக்குகளைக்கொண்டு செல்வது எளிதாகையால் அவ்விதப் பிரதேசங்களில் வியாபாரம் சுலபமாக நடைபெறும். நீர்வள நிலவளங்களால் செழிப்பமுள்ள நாட்டில் வாணிபம் சிறந்து நடைபெறும். தரைமார்க்கமாக வியாபாரப் பண்டங்களை யிட்டுச்செல்ல, நல்ல ரஸ்தாக்கள் வேண்டுவ தவசியம். மேலும், அந்தந்தநாட்டு மன்னர்களி னுணையால் கொள்ளை, அளவுக்கு மிஞ்சிய வரி,சுங்கக்கட்டணம் முதலாயின இல்லாதொழியின் வர்த்தகம் பெருகும். இனி, நம் தமிழ்நாட்டு வாணிபத்தைச் சற்று கவனிப்போம்:

தென்னாட்டுச் சரித்திரத்தைக் கூறுதற்கு அதிகமான சரித்திராதாரங்களில்லா விடினும் சங்ககாவியங்களையே ஆதாரமாகக் கொண்டு நாம் அதனை ஆராயலாம். தமிழ்நாட்டுள் பல்லாண்டுகளுக்கு முன்னரிருந்தே வருணாஸ்ரம தர்மங்கள் நடைபெற்று வந்தனவென்பது வெள்ளிடைமலை. அந்நான்கு வருணாஸ்ரமத்தாருள்ளும் வைசிய ரென்னும் தர்மத்தையுடையவர் பெரிதும் வாணிபத்தில் ஈடுபட்டுவந்தனர். இதனாலவ் வகுப்பினருக்கு 'வணிகர்' என்ற காரணப்பெயரும் வரலாயிற்று. அவர்கள், ஓதல், வேட்டல், ஈதல், உழவு, நிரையோம்பல், வாணிபம் முதலான ஆறுதொழில்களை யுடையவர்கள். பண்டங்களைக் குறைந்த விலைக்கு வாங்குவதும், பெற்றபண்டங்களை அதிகலாபமின்றி விற்றலும், பண்டங்களில் போலி வஸ்துக்களைக் கலந்தும், குறைய அளந்தும் பொதுமக்களை ஏமாற்றாதிருத்தலுமே யிவர்தம் அறமாம். இவர்கள் பசுக்களை அதிகமும் வணங்கி வந்தனர். நிற்க,

தண்டமிழ் நாட்டில் உள்நாட்டு வாணிபம் உயர்வை யடைந்து வந்தது. மஹாமேரு மலைப்பிரதேசங்களி னின்று, சுவர்ணமும், பொதியமலையினின்று சந்தனக்கட்டைகளும், குடகினின்று மிளகு, ஜாதிக்காய்களும், வங்காள குடாக்கடற் பிரதேசங்களி லிருந்து முத்து, சங்கு முதலியனவும், கங்காநதி பாயும் பாகங்களிலிருந்து கோதுமை, பருத்தி முதலான விளைபொருள்களும் உள் நாட்டில் வியாபாரஞ் செய்யப்பட்டு வந்தன. கடற்கரைகளில் வசிப்போர், கடல்நீரை உப்பாக்கி, சாக்குகளிலிட்டு மூட்டை மூட்டைகளாக அனுப்பி வியாபாரஞ் செய்தனர். நெல், துவரை முதலிய உணவுப் பொருள்களும் வியாபார நிமித்தம் உள்நாட்டின் பிறபாகங்களுக்கு அனுப்பப்பட்டன. வியாபாரிக ளெல்லாம் ஒருங்குகூடிப் பண்டங்களின் நிலவரவிலையை நிர்ணயித்தற் பொருட்டு ஒவ்வொரு பொதுஸ்தலங்களிலும் சந்தைகூட்டினர். பண்டைக்காலத்தி லேற்படுத்தப்பட்ட இச்சந்தைகள் இன்றும் வழக்கிலிருந்து வருவதை நாம் நாளையுங் காணலாம். இச்சந்தைகளில், மாடு, ஆடு, குதிரை போன்ற பிராணிகளும் வியாபாரஞ் செய்யப்பட்டு வந்தன.

இனி, புறநாட்டு வியாபாரத்தைச் சற்று நுவலுவோம்: குணகடல், குமரி, குடகம், வேங்கடம் ஆகிய நான்கு எல்லைகளுக்கு வெளிப்பட்ட குடநாட்டி

னின்று அங்குள்ளார் மிளகு,கிராம்பு,வால்மிளகுகளான பண்டங்களை ஏற்றுமதி செய்தனர்; பர்மாவிலிருந்து வாசனைத் தைலங்கள், பொடிகள் முதலிய (தேக சுத்திக்கான) பொருள்கள் வாணிபஞ் செய்யப்பட்டன; பன்னீர், ஜவ்வாது, குங்குமம், சூடம் முதலானவை சீனதேசத்தினின்றும் வர்த்தக முகங்களுக் கனுப்பப்பட்டன; ஜாவாமுதலான தீவுகளிலிருந்து புகையிலை வந்திறங்கியது. பல்வேறு வகையானபரிகள் அரேபியாபோன்ற மேல்நாடுகளி லிருந்து தமிழ் நாட்டில் வந்திறங்கின; மதுபான வகையிலுட்பட்ட, பிராந்திபோன்றவை மேல்நாட்டாரால் வியாபாரஞ் செய்யப்பட்டன.

நம் தமிழர் சமுத்திரங்களைத் தாண்டியும் முற்காலந் தொட்டே வாணி பம் செய்தனரெனக் கூறப் போதிய ஆதாரங்களுண்டு. "திரைகடலோடியும் திரவியந்தேடு" என்ற வியாபாரப் பழமொழி இக்காரணத்தாலேதா னுதித் ததுபோலும். நாலடியாரில் பாண்டிய மன்னனைச் சிறப்பித்துக் கூறவந்த ஆசிரியர்கள், "எண்ணிக்கையற்ற மரக்கலங்கள் நின்றுகொண்டிருக்கும் கடற் கரையையுடைய பாண்டியனே!" என்று கூறியதினின்றும் நம்தமிழ்நாட்டி னரின் அயல் நாட்டு வாணிபத்தை நிர்ணயிக்கலாம்.

அக்காலத்தில் தமிழ் நாட்டினின்று மிளகு, மெல்லிய ஆடைகள், பவ ளம், முத்து, பட்டு வஸ்திரங்கள் ஆகியவை, ஸ்பெயின், கிரீஸ் முதலான தேசங் களுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன வென்று ஓர் மேல்நாட்டுச் சரித்திர நிபுணர் கூறுகின்றார். மற்றும், தமிழ்நாட்டைச் சுற்றியுள்ள மூன்று திசைகளிலும் கடல் சூழ்ந்திருந்த காரணத்தால் வெளிநாட்டு வியாபாரம் எளிதில் நடை பெறுவதாயிற்று. (தொடரும்)

உறந்தை-அரங்கநாதன்.

# மாணவர் பகுதி.

## ஆத்திசூடி உதாரணக்கதைகள்.

(171-ம் பக்கத் தொடர்ச்சி.)

### "இளமையிற் கல்."

"இளமையில்—இளமைப் பருவத்திலேயே, கல்—(மனிதனே! நீ) கல்வி யைக் கற்றுக்கொள்" என்பது இதன்பொருள்.

மனிதர்க்குக் கல்வியே எல்லா நலங்களையுந் தரவல்லது; இம்மை மறுமைப் பயன்களைக் கொடுக்கக்கூடியது. கல்வி கற்றவர்களே எத்தேயத்தும், எக் காலத்தும், எல்லோராலும் கொண்டாடப்படுவார்கள்; மன்னர்க்குத் தம் தேயத்தில் மட்டுமே சிறப்புண்டு; கல்விகற்றார்க்கு எந்நாட்டிலும் சிறப்புண்டு. கல்வியறிவுடையார் அரசரினும் மேம்பட்டவராவர்; கல்லாதவர்கள் செல்வ மிக்காராயினும் சிறப்புறார். ஆதலின், எல்லோரும் கல்வியைக் கற்றுக்கொள்

ளல் வேண்டும். மனிதர்க்கு அது நிரம்பக்கூடியகாலம் இளமைப்பருவமே யாதலின், அங்ஙனம் கல்வி பயில விரும்புவோர் அவ்விளம்பிராயத்திலேயே அதனைக் கற்க முயலல் வேண்டும்; அவ்விளமையைவிட்டு முதுமையில் முய லின் அதனை அடைதல் அருமையாம். மனிதரின் இளம்பருவத்தில் அறிவு, வணக்கமும் மென்மையுமுடையதா யிருக்குமாதலின் அதில் கல்வி யுணர்ச்சி எளிதிற் பதிந்துவிடும்; முதுமையில் அவ்வறிவு வணக்க மின்மையும் வன்மை யும் பெற்றிருக்குமாதலின் அதில் அவ்வுணர்ச்சி அமைதல் இயலாது. இவற் றைக் குறித்தே, "ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையாது" என்ற பழமொழி யும் வழங்குகின்றது. இங்ஙனம் இளமையிற் கற்றோர் சிறப்புறுவர் கல்லார் இழி வுறுவரென்பதை அடியில்வரும் கதை விளக்கும்:—

ஒரு கிராமத்தில், ஒருவர் கிராம முன்சீபு வேலைபார்த்து வந்தார். அவ ருக்கு ஓரே புதல்வனிருந்தான். அவன் ஏக புத்திரனாதலின், அவரால் அருமை யாக வளர்க்கப்பட்டான். அவன் கல்வி கற்றுக்கொள்ளும்பொருட்டு அவர், அவனை, இளமைப்பருவத்திலேயே பாடசாலைக் கனுப்பினர். அவன் செல்வத் துடன் வளர்ந்துவந்தானாதலின், உயர்ந்த வுணவுகளை யுண்பதில் புத்தியைச் செலுத்தி வந்தானேயன்றிப் படிப்பில் செலுத்தவில்லை. அதனால் அவனுக்குக் கல்வி யறிவு சிறிது முண்டாகவில்லை. அவன் சிறு வயதாயிருக்கும்போதே அவனுடைய தந்தை இறந்துவிட்டார். குடும்பபாரம் அவனைச் சார்ந்துவிட் டது. அவ்வாறு அவன் குடும்பத்தையேற்று நடத்தும்போது கையெழுத்தும் போடத் தெரியாதவனாயிருந்தான். அந்நிலையில் அவன் எழுதப் படிக்கத் தெரியாதவனா யிருக்கிறானென்பதை, மேலதிகாரிகள் உணராமலே அவன் தந்தை உத்தியோகத்திற்கு அவனை நியமித்துவிட்டார்கள். கிராமவாசிகளுக் குக் கிராமப் பெரியதனம் பார்ப்பதில் நல்ல மதிப்புண்டு. அந்த மதிப்புக்காக அவன், எப்படியாவது தந்திரம்செய்து அந்த உத்தியோகத்தைப் பார்க்கலா மென்று ஏற்றுக்கொண்டு, எழுதப்படிக்கவாவது சிறிது கல்வி கற்றுக்கொள் ளலாமென்று முயன்று பார்த்தான். அதில் எவ்வித பயனு முண்டாகவில்லை. முடிவில் மிக்க பிரயாசை யெடுத்து உத்தியோகத்திற்குக் கையெழுத்து மாத்திரம் போடத் தெரிந்துகொண்டான். அதன்மேல், கல்விகற்ற சில வாலி பர்களைச் சிநேகிதராக்கிக்கொண்டு, தாசில்தாரிடமிருந்து தனக்குவரும் உத்த ரவுகளை அவர்களிடம் காட்டி அவற்றிலுள்ள விஷயங்களைத் தெரிந்துகொண் டும், அவற்றிற்கு விடையான ரிப்போர்ட்டுகளை அவர்களைக்கொண்டே எழுது வித்து அவற்றில் கையெழுத்திட்டுக் கச்சேரிக் கனுப்பியும் தன்னுடைய கிராம முன்சீப் வேலையை நடத்தி வந்தான்.

அப்போது, அவனுடைய சிநேகிதருள் முனியன் என்ற ஒரு மோசக் காரன் அந்தக் கிராம முன்சீப் வேலையைத் தான் அடையவிரும்பி அதற்குரிய சமயத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தான். அப்படியிருக்கும்போது கிராம முன்சீபுக்கு ஒருவாரம் லீவ் தேவையாயிருந்தது. அதனால் தனக்காக மேல் அதிகாரிக்கு ஒரு லீவ் லெட்டர் எழுதித்தரும்படி அந்த மோசக்காரச் சிநேக

னிடம் தெரிவித்தான். அவன், தான் உத்தேசித்ததை நிறைவேற்றுதற்கு இதுதான் தருணமென்று, "எனக்குக் கிராம முன்சீப் வேலை தேவையில்லை; இவ்வேலையை என் நண்பன் முனியனுக்குக் கொடுத்துவிடுமாறு நான் வேண்டுகிறேன்" என்று ஒரு கடிதமெழுதிக் கிராமமுன்சீபிடம் கையெழுத்து வாங்கி அதை மேலதிகாரிக்கு அனுப்பிவிட்டான். இரண்டு தினங்களுக்குள் மேலதிகாரி முனியனைக் கிராமப் பெரியதனக்காரனாக நியமித்து அதற்குரிய உத்தரவை அவனுக்கனுப்பி விட்டார். முனியன் அவ்வுத்தரவைப் பெற்றவுடன் கிராமமுன்சீபிடம்போய், "உன்வேலையை அதிகாரி எனக்கே கொடுத்துவிட்டார்" என்று கூறினான். கிராமமுன்சீப் திடுக்கிட்டு உடனே அதிகாரியிடம் விரைந்தோடி, "என்மீது குற்றமில்லாதிருக்கும்போது என்வேலையை முனியனுக்கு ஏன்கொடுத்தீர்கள்?" என்று கேட்டான். அதிகாரி, "நீயே வேலைதேவையில்லை யென்று கடிதமெழுதி யிருப்பதால் நாம் உன்னை அவ்வேலையினின்று நீக்கிவிட்டோம்" என்றார். கிராமமுன்சீப் "ஐயோ! நான் அப்படி எழுதவில்லையே; லீவுக்கல்லவோ எழுதியிருந்தேன்" என்றுரைத்தான். அதிகாரி அவனால் எழுதப்பட்ட கடிதத்தை யெடுத்து அவனிடம் கொடுத்து "இதிலுள்ள கையெழுத்து உன்னுடையதுதானா?" என்று கேட்டார். அவன், 'ஆம்' என்றான். இதைப்படி, என்று அதிகாரி உரைத்தார். அவன் படிக்கத் தெரியாதவனாதலின் அதைக் கையில் வைத்துக்கொண்டு பேசாமல் நின்று விழித்தான். அவனுடைய கல்வியறிவில்லாத் தன்மையை அதிகாரி தெரிந்து கொண்டார். அதனால் அவர் கோபங்கொண்டு "நீ படிப்பில்லாமலே மோசமாக நம்மை ஏமாற்றி வேலைபார்த்து வந்திருக்கிறாய்; எனினும் இக்குற்றத்தை நான் மன்னித்துக் கொள்கிறேன்; நீ இனிவேலையை விரும்பாதே" என்று சொல்லிவிட்டார். அவன் அவமானமுற்றுத் திரும்பினான். அவன் இளமையிற் கல்லாததனால் அடைந்த மானக்கேடு இது.

செம்பூர். வீ-ஆறுமுகஞ்சேர்வை.

---

## மாணவர் கடமைகள்.

இப்புவியின் கண்ணே மாணவர்களால் செய்யப்படும் கடமைகள் அநேகமிருக்கின்றன. ஏதோ நம் சிற்றறிவுக்கு எட்டியவாறு அக்கடமைகளைப்பற்றி ஈண்டு ஆராய்வாம். அக்கடமைகளாவன:—குருபக்தி, தாய்தந்தையைப் பேணுதல், கோள்சொல்லாமை, கடவுட்பக்தி, ஆலயவழிபாடு, எஞ்ஞான்றும் சத்தியமே காத்தல், அறிஞோரைத் துணைக்கொள்ளல், சூதின்மை, களவின்மை, செய்ந்நன்றி மறவாமை, இனியவைகூறல், புலாலுண்ணாமை, ஜீவகாருண்ணியம், பொறுமை, புறங்கூறாமை ஆகிய இத்தகைய கடமைகளாம்.

இம்மானுட வாழ்வானது பலவேறு வகைகளாய்ப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. அவற்றுள் மாணவர் வாழ்க்கையாகிய சிறுபிராயமே மிகவும் மேன்மையுடைத்து. நம்முடைய பிற்கால சீவியத்துக்கு வேண்டியவற்றை யெல்லாம்

இவ் விளம்பிராயத்திலேயே செவ்வனே பயிலுதல்வேண்டும். இக்காலத்தில் பயில்கின்றவைகள் பிற்காலத்துக்கு இடையூறு விளைவிக்கா வண்ணம் பகுத்தறிவென்னும் அருமருந்தன்ன நுண்ணிய அறிவினால் ஆராய்ச்சிசெய்தல் வேண்டும். ஏனெனில் இப்பயிற்சிகள் "பசுமரத்தில் ஆணி அறைந்தாற்போல் உளத்திலே வேரூன்றி நிற்குமாதலால் நாம் இக்காலத்தில் நற்குணத்தையும் நடையையும் உறுதியாய் வேரூன்றச் செய்தல் வேண்டும். இதுபற்றியே ஔவைப் பிராட்டியும் "பருவத்தே பயிர்செய்" எனத் திருவாய் மலர்ந்தருளினர்.

மாணவர்களாயிருப்பவர்கள் மாதாபிதாவுக்குக் கீழ்ப்படிந்து நடக்கவேண்டும். அவர்கள் சொல்லும் சொற்களை அலட்சியம்செய்யாது சிரமேற்கொண்டு நடக்கவேண்டும். அவர்கள் எவ்வளவோ பாடுபட்டுத் தினந்தோறும் வெய்யில், பனி, மழை யென்று கவனியாது பிள்ளைகள் படித்து மேன்மையான நிலைமைக்கு வரவேணுமென்கின்ற பேரவாவினால் கஷ்டப்படுகிறார்கள். இவ்வாறு நடாத்திய அவர்கள் மூப்பு பிணி ஆகிய கொடிய வியாதிகளினால் பீடிக்கப்பட்டிருக்கும்பொழுது அவர்களுக்கு அப்பிள்ளைகள் கூடியவரையில் பொருளுதவி, காய உதவி குறிப்பறிந்து புரிதல்வேண்டும். அவர்களே தங்கள் கடவுள் என்றுணர வேண்டும். இதுபற்றியே ஔவைமூதாட்டியும் "அன்னையும் பிதாவும் முன்னறிதெய்வம்," "தாயிற் சிறந்தொரு கோயிலுமில்லை" என்று சொல்லியுள்ளனர்.

கடவுட்பக்தி பேரருளைப் பெறுவதற்கு முக்கிய சாதனமா யிருத்தலாலன்றோ தெய்வப்புலமைவாய்ந்த திருவள்ளுவநாயனாரும் "கற்றதனாலாய பயனென்கொல் வாலறிவன் நற்றா டொழாஅரெனின்" "வேண்டுதல் வேண்டாமை யிலானடிசேர்ந்தார்க், கியாண்டு மிடும்பையில" என்று திருவாய் மலர்ந்தருளினார். அவனன்றி யோரணுவு மசையாதாதலால் மாணவர் அவனுடைய பேரின்பத்தைப் பெறவேண்டுமானால் அவனைத் தினமும் வழிபடல்வேண்டும்.

மாணவர் அறிஞோராகிய நல்லோரையே துணைக்கொள்ளல் வேண்டும். சந்தனமரத்தை யடுத்துநிற்கும் வேப்பமரமும் சந்தனமரமாவதுபோல் நல்லாரிணக்கமே அவர்கள்மேற் சேருகின்றது. தீயவருடன் கூடுதல் கூடாது. அவர்களுடன் சேர்ந்தால் களவாடுதல் பொய்சொல்லல் முதலிய பஞ்சமா பாதகங்களைச்செய்ய நேரிடும். இதுபற்றியே ஆன்றோர்களும் "பன்றிக்குட்டியுடன் சேர்ந்த கன்றுக்குட்டியும் மலம் தின்னும்" என்று சொல்லி யிருக்கின்றனர்.

குரு பக்தியில்லாதார்க் கொன்றும் சித்தியாகாது. இம்மைக்கும் மறுமைக்கும் அவரது கருணை யிருக்கவேண்டும். எனவே ஒவ்வொரு மாணாக்கனும் குருபக்தி யுடையவனாயிருத்தல் அத்தியாவசியம்.

மாணாக்கர்கள் எப்பொழுதும் உண்மையே கடைப்பிடித் தொழுகல் வேண்டும். சத்தியமே தலைகாக்கும். மாணவர் எதைக் காக்காவிடினும் நாவொன்றையே காக்கவேண்டும். உண்மை பேசாவிடின், எப்படி ஒரு சிறு தீக்கொள்ளி ஓர் பெரிய காட்டை எரிக்கிறதோ அப்படியே நாவானது நம் சரீரம் முழுவதையும் சுட்டுவிடும்.

மாணுக்கர்கள் வீண் செலவு செய்தல் கூடாது. "ஆனமுதலி லதிகம் செலவானல், மானமழிந்து மதிகெட்டுப்-போனதிசை, யெல்லார்க்கும் கள்வனய் ஏழ்பிறப்பும் தீயனய், நல்லார்க்கும் பொல்லனும் நாடு" என்பதுபோல வீண்செலவு செய்கிறவன் ஈற்றில் மானமழிந்து மதிப்பில்லாதவனய்விடுவான்

களவாடுதல் கூடாது. அநேகர் தங்கள் அருகில் இருக்கும் நண்பரின் புஸ்தகங்களைக் களவாய் எடுத்துவிற்று வீண்செலவு செய்வது வழக்கம். இவ்விளமையில் இச் சிறு திருட்டுத்தனத்தைச் செய்தால் ஈற்றில் பெரும் கள்வராய் வரநேரிடும். ஆகையால் களவை அறவே யொழித்துவிடவேண்டும்.

கோள் சொல்வது மிகவும் ஓர் கெட்ட பழக்கம். இதற்குக் காரணம் பொருமையே. கோள் சொல்பவன், தான் யோக்கியனென்றும் மற்றவன் அயோக்கியனென்றும் உபாத்தியாயர் மதிக்கவேண்டுமென்பதே அவன் கருத்து. கோள் சொல்பவன் தானே தனக்கு அழிவைத் தேடிக்கொள்ளுகிறன். ஆகையால் யாவரும் கோள் சொல்லாது சற்குணரா யிருத்தல் வேண்டும்.

ஒருவர் செய்த நன்றியை ஒருகாலமும் மறக்கக்கூடாது. ஒருவர் செய்த நன்மையை மறப்பதிலும் அவர்செய்த தீமையை மறப்பது மிகவும் நன்று. "எந்நன்றி கொன்றூர்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை செய்ந்நன்றிகொன்ற மகற்கு". எனவே எவ்வகைத் தருமங்களை மறந்தவர்க்கும் ஈடேறவழி யுண்டாம்; செய்ந்நன்றி அழித்தவர்க்கு ஈடேறவழி இல்லவே இல்லை என்பது தெளிவாம்.

மாணுக்கர் எவரிடத்தும் இனியவை கூறல் வேண்டும். கடுஞ்சொல் பேசுபவருடனும் இனிய சொற்களைக் கூறுவதால் அவர்களை நம் வசப்படுத்தலாம். "இன்சொலாலன்றி யிருநீர் வியனுலகம், வன்சொலா லென்றும் மகிழாதே—பொன் செய், கதிர்வளையாய் பொங்கா தழற்கதிராற்றண்ணென், கதிர்வரவாற் பொங்குங் கடல்" என்பது இதனை யுணர்த்தும்.

மாணவர், புலா லுண்ணலை விட்டுவிடவேண்டும். ஒருயிரைக் கொன்று தின்பது சகோதரரிலொருவரைக் கொன்று தின்பதையே யொக்கும். உலகத்திலுள்ள சீவகோடிகளெல்லாம் கடவுளுடைய பிள்ளைகளாம். அவைகளை நாம் கொன்று தின்போமாயின் பரமபிதாவாகிய கடவுளுக்கு எவ்வளவு கோபமாயிருக்கும்?

"அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்ற, னுயிர்செகுத் துண்ணுமை நன்று". எனவே ஆயிரம் யாகம் செய்தலினும் புலாலுண்ணுமை நன்றும். "கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி, எல்லா உயிரும் தொழும்". அதாவது ஊனைப் புசியாதவனை எல்லா உயிரும் வணங்கும் என்பதாம்.

மாணவர், கோபமில்லா திருத்தல் வேண்டும். கோபமானது பல துஷ்ட செய்கைகளைச் செய்வதற்குத் தூண்டிவிடும். கோபத்தால் கெட்டவர் அநேகம்பேர். ஆகையால் கோபத்தைக் கூடியவரையில் அடக்கவேண்டும்.

மாணுக்கர்கள் பொறுமையாகிய சற்குணத்தைக் கடைப்பிடித் தொழுகல் வேண்டும். "அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை, யிகழ்வார்ப் பொறுத்த றலை". ஒருவன் நிலத்தைக் கிண்டும்போது அது எப்படி அவனைத் தாங்குகிறதோ அப்படியே நாமும் நம்மை யிகழ்வாரைப் பொறுத்தல் வேண்டும்.

இப்படியாக மேலே கூறப்பட்டவைகள் இப்பூமியில் உள்ள மனுஷர் செய்யவேண்டிய பலவித அறங்களாம். ஆகையால் மாணுக்கர்கள் தீயவற்றைப் போக்கடித்து நன்மை யாகியவற்றைச் செய்தல்வேண்டும்.

**சீ. பொ. இரங்கஸ்வாமி ஐயர், கந்தரோடை.**

---

## "நல்லுரைத் திரட்டு"

(172-ம் பக்கத் தொடர்ச்சி.)

(135) எவ்விடயத்திலும் "ஆத்திர" புத்திகூடாது. (136) கெடப்போவோரே கேட்டை எண்ணுகிறார். (137) "பேராசை பொறாமைக்குச் சகோதரன். (138) "யதார்த்தமே" உத்தமமானதாகும். (139) இன்றைக்குச் சிரிப்போர் நாளைக்கு அழுவார். (140) காரியம் இறுதியடைந்த பின்னர் கவல்தல் அறிவுடைமையாகாது. (141) மனிதன் ஒன்று எண்ணுகிறான், கடவுள் ஒன்று செய்கிறார். (142) கட் (ஷ்) டப்படாவிடின் லாபமில்லை. (143) "தீண்டப் படாதவர்" என இறைவன் படைத்ததாய்த் தெரியவில்லை; மனிதரேபடைத்துளார். எனவே, கடவுள் நியதி எதுவோ, அதன்படி நடத்தல் அறிவுளார் கடமை. (144) நாம் எவர்க்கும் "குடி" யாகோம். (145) நியாயம் வேறு; சட்டம் வேறு; முன்னது உண்மையானது; பின்னது அநியாய மானது. (146) அன்பர்க்கு, "உலகம்" "அன்பு" மயமாகவே தோன்றும்; பொறாமையாளர்க்கு "பொறுமை" மயமாகவே தோன்றும். அவரவர் எண்ணப்படியே அவரவர்க்குத் தோன்றுகிறது. (147) எல்லாத் "தானங்" களிலும் சிறந்த "தானம்" வித்தியாதான" மே யாகும். (148) ஒருவருடைய உள்ளக்கிடக்கையை நன்குணரச் சக்தியிலாதார் "மக்க" ளினத்தைச் சார்ந்தவராகார். (149) "அகக்கண்" கொண்டு நோக்குவதே "ஆனந்தம்". (150) அறிவை அறிவால் அறிதல் அறிவுடைமை. (தொடரும்) **திரு. வீ. மு. பொன்னையா.**

---

## பிழை திருத்தம்.

நிகழும் அக்ஷயஹு ஐப்பசிமாதம் வெளியான ஆனந்தபோதினி சஞ்சிகையில் 'மானுஷீக ஐக்யம்' என்னுந் தலையங்கத்தைச் சார்ந்த வியாசத்தின் தொடர்ச்சியில் 159-ம் பக்கம் முதல்பாரா 6-வது வரியின் ஈற்றிலும், 7-வது வரியிலும் வந்துள்ள 'நாயுடு என்ற வகுப்பிலும், கவரை, வன்னியர் முதலிய பல பிரிவுகள் உள்ளன' என்கிற வாக்கியங்களை 'நாயுடு என்ற வகுப்பிலும் பல பிரிவுகள் இருக்கின்றன' எனத் திருத்தி வாசிக்கவும். **ப-ர்.**

# பெண்மக்கள் பகுதி.

## நகைப் பைத்தியம்.

நேயர்காள் !

**பு**ண்ணிய பூமியாம் நம் பாரதநாடு தற்காலம் அடைந்திருக்கும் நிலைமையைப்பற்றி யான் அதிகம் கூறவேண்டுவதில்லை. இப்பூமண்டலத்தின்கண் 'வறுமைப்பிணியால் பீடிக்கப்பட்டுள்ள ஜனங்கள் நிறைந்தநாடு' நம் பாரதநாடே யெனினும் மிகையாகாது. உண்ண உணவும் உடுக்க உடையும் இருக்க இடமுமின்றி ஏங்கித்தவிக்கும் ஜனங்களை நம்தேயத்தின் நாலாபக்கங்களிலும் காணலாகும். "பொன்விளையும் பூமி" யெனப் புகழ்படைத்த நம் தாய்நாடு இதுகாலை வறுமைவாய்ப்பட்டு அவதிப்படுவதற்குக் காரணங்கள் பலவுளவாயினும் அவற்றுள் ஒன்றாய "நகைப்பைத்தியம்" என்பதைப்பற்றி ஈண்டு என் சிற்றறிவிற் கெட்டியவாறு வரைந்துள்ளேன்.

நம் நாட்டில், அதிலும் முக்கியமாகத் தமிழ்நாட்டிலே ஜனங்கள் நகைகளுக்காகச் செலவிடும் தொகைகளைக் கவனிக்கப்புகின் இந்தியரின் நிலைமையறிந்த எவனும் கண்ணீர்விடாமலிருத்தலரிது. அந்தோ! ஒருவேளை உணவிற்கும் வகையின்றி, மரநிழலையே மாளிகையாகவும் பூமிதேவியையே படுக்கையாகவும் கொண்டு நம் சகோதரர்கள் வாடிவதங்கித் தவித்துக்கொண்டிருக்கையில் இவர்கள் பல்லாயிரங்கணக்கில் தமது பணத்தை நகைகளில் கொட்டுவதால் யாதுபயன்? நாகரீகமிகுந்த மேனாட்டார் கைத்தொழில்களிலும் வியாபாரங்களிலும் தங்கள் முதலை முடக்கிப் பெருத்த இலாபத்தை அடைகின்றனர். நம் நாட்டிலும் அந்நியமூலதனத்தால் நடத்தப்படும் கம்பெனிகளும் கைத்தொழில்களும் அனந்தம். நம்மிந்தியரும் நகைகளில் செலவிடும் பணத்தைக்கொண்டு கைத்தொழிற்சாலைகளை ஏற்படுத்துவாராயின் நம் நாடும் கைத்தொழிலில் முன்னேற்றமடையும். அவர்களும் இலாபத்தை யடையலாம். பசியால் வருந்தும் எத்தனையோ ஏழைகளும் பிழைக்க ஹேதுவாகும்.

நிற்க, நகைகளின் மாதிரியும் அடிக்கடி மாறிக்கொண்டிருக்கிறது. இதனால் ஏற்படும் தீமையை விளக்க ஒரு உதாரணம் எடுத்துக்கொள்வோம். ஒருவன் இன்று தன் மனைவிக்கு ஒரு பொற்சங்கிலி செய்கிறான். சிலமாதங்கள் கழித்து வேறொருவீட்டில் புதுமாதிரியாக ஒரு சங்கிலி செய்கிறார்கள் என்று வைத்துக்கொள்வோம். அந்த ஸ்திரீக்கு அதைக்கண்டதும் தன் பழைய நகையின்மீது வெறுப்பும் புது நகையின்மீது விருப்பும் மேலிடுகின்றன. அதனால் அவள் தனக்கு இயற்கையாயுள்ள சாஹஸத்தினால் புருஷனைச் சம்மதிக்கச்செய்தோ அல்லது புருஷன் அறியாமலோ பழையநகையை அழித்துவிட்டுப் புதுமாதிரியாகப்பண்ணிக்கொள்ளுகிறாள். அந்தோ! ஒரு நகை அழிக்கப்பட்டால் அது ஒன்றுக்கு முக்கால்கூடத் தேறாதென்பது அவர்களுக்குத்

தெரியாதுபோலும்! ஒருவேளை ஒருநகை அழிக்கப்படாமல் 10-வருஷ காலம் இருக்குமாயின் ஒன்றுக்குப் பாதி தேய்ந்துவிடும். இது யாருக்குலாபம்?

தவிர நம் தமிழ்நாட்டில் ஸ்திரீகள் அணியும் நகைகளையும் அவைகளின் பெயர்களையும் கவனிக்குமிடத்துச் சிரிப்புவராமலிராது. ஒரு சுமாராகக் கணக்கெடுத்ததில் ஸ்திரீகள் அணியும் ஆபரணங்களின் தொகை 50 என்று தெரிகிறது. இவைகள் எல்லாவற்றையும் செய்வதற்கு ரூபா இருபதினாயிரத்திற்கு மேலேபிடிக்கும். இவ்வளவு நகைகளையும் ஒரு ஸ்திரீ அணிந்துகொண்டாலோ பார்ப்பதற்கு அருவருப்பாயிருக்கும். அந்தோ! ஈஸ்வரன் அமைத்த காதையும் மூக்கையும் பற்பலவிடங்களில் துளைத்துக்கொண்டு தங்கள் இயற்கை யழகைக் கெடுத்துக்கொள்ளும் சமயம் அவர்கள் படும் அவஸ்தை ஈஸ்வரன் அறிவான்.

பரம ஏழைகளாயினும் நகைவிஷயத்தில் பணஞ்செலவிடுவதற்கு அவர்கள் பின்னிடைகிறதில்லை. கடனிறுக்கச் சக்தியின்றிக் கடன்காரர்களைக் கண்டபொழுதெல்லாம் கருடனைக்கண்ட பாம்புபோல் ஓடி ஒளியும் அநேகர் தங்கள் சொற்பவருமானத்தையும் ஸ்திரீ தேவதைகளிடம் சமர்ப்பித்துவிட்டுக் கடன்காரர்களுக்குப் பதில் சொல்ல முடியாமல் தவிப்பதை யான் கண்கூடாகக் கண்டிருக்கிறேன். என்ன அநியாயம்!

பல வருஷங்களாக நகைகள் பரவிவிட்டபடியால் திடீரென்று அவைகளை நிறுத்துவது அழகாயிராதுதான். ஆயினும் சாதாரணமாக இரண்டொரு நகைகள் அணிந்தால்தான் அழகாயிருக்குமேயல்லாது சுமக்கமுடியாதபடி நகைகள் அணிவதால் வீண் கஷ்டமும் பணநஷ்டமும் ஏற்படுமென்பதே எனது தாழ்மையான அபிப்பிராயம். T. S. ராமகிருஷ்ணன்.

# வைத்தியப் பகுதி.

## இலகு வைத்திய முறைகள்.

### ஜல மருந்துதல்.

**தா**கத்திற்கு ஜலம் அருந்தும் விஷயத்தில் சாதாரணமாய் ஜலத்தை நன்றாகக் காய்ச்சிக் குளிரவைத்துச் சாப்பிடுவதே உத்தமம்.

நேரிசை வெண்பா.

"காய்ந்தாற வைத்தநீர் கட்டுழலை விக்கலொடு
வாய்ந்தவதி சாரபித்த மாற்றுங்காண்—சேர்ந்துவரு
மூர்ச்சை விஷஞ்சாத்தி முன்மயக்க மேகமதி
யூர்ச்சிதமுத் தோஷம்போக் கும்." என்றார் தேரையர்.

சாப்பிடும்போது கொஞ்சம் கொஞ்சமாக மெள்ள மெள்ள நீர் அருந்தவேண்டும். இரைப்பையானது சீக்கிரத்தில் வறண்டுபோகக் கூடியதல்ல. நாவும், வாயும், தொண்டையுமே அடிக்கடி வறண்டுபோகும். இதைத் தடுக்கக்கருதியே ஜலம் அருந்தப்படுகிறது. ஆனால் சிலர் ஜலத்தை நா, வாய் முதலிய வறட்சி

யுள்ள இடங்களில் படாமல் தொண்டைக்குள்விட்டு வயிற்றை நிரப்புகிறார்கள். இதனால் வறண்டதாவும், வாயும் குளிராமல் வியாதிக்கு இடமேற்படுகிறது.

ஆகையால் நாம் தண்ணீர் அருந்தும்போது முதலில் வாய்நனையச் சில நேரம் ஜலத்தை வாயில் வைத்திருந்து மெள்ள மெள்ளத் தொண்டைக்குள் இறங்கவிடவேண்டும். படுக்கு படுக்கு என்று அருந்தும் வழக்கத்தை அறவே ஒழித்துவிடவேண்டும். ச. விஸ்வநாதன், திருவானைக்கா.

---

### சிரங்குகளுக்கு மருந்துகள்.

பின்வரும் மருந்து முறைகள் சில சிறந்தவைத்திய நூல்களில் உள்ளவை. பலருக்கும் உபயோகமாகும் பொருட்டு அவற்றை இங்குக் குறிப்பிடுகிறோம்.

### சொறிசிரங்குக்கு.

(1) பூவரசம் பட்டையில் நீராகாரத் தண்ணீர் விட்டு இடித்துச் சாறு பிழிந்து அரைக்கால் படிவீதம் மூன்று நாள் உப்பு புளி நீக்கிச் சாப்பிட்டுக் கெந்தகம் சித்திரமூல வேர்ப்பட்டை வகைக்குக் கால்பலம் வீதம் சேர்த்து அரைத்துக் கால்படி நல்லெண்ணெயில் போட்டு வேகவைத்து அதைக் காலையில் உடம்பில் தடவி மாலையில் அரைப்புத் தேய்த்துக் குளிக்கச் சொறிசிரங்கு தீரும்.

(2) ஏலம், மிளகு, கார்க்கோல அரிசி, கெந்தகம், சூடன், பிராய்ப் பட்டை வகைக்கு ஒரு வராகனெடை வீதம் பொடித்து அரைக்கால்படி நல்லெண்ணெயில் போட்டுக்காய்ச்சி அதை உடம்பில் காலையில் தடவி மாலையில் அரைப்பு இட்டுத்தேய்த்துக் குளிக்க ஷை சொறிசிரங்கு தீரும்.

### பேய்ச் சொறிக்கு.

(1) இந்துப்பைப் பொடிபண்ணி நெய்யில் போட்டு வெயிலில் வைத்து உடம்பில் பூசிவைத்திருந்து மறுநாள் அரைப்புத்தேய்த்து நீரில் மூழ்கப் பேய்ச் சொறி தீரும்.

(2) சீந்தில்கொடி, வேப்பம்பட்டை, பேய்ப்புடல் வகைக்குப் பலம்பத்து இடித்துத் தூணி நீரில் போட்டு எட்டொன்றாகக் காய்ச்சி வடித்து அதில் பசுநெய் ஒருபடி கூட விட்டுத் திரிபலை (கடுக்காய் தான்றிக்காய் நெல்லிக் காய் மூன்றும்) செஞ்சந்தனம், மரமஞ்சள், விலாமிச்சம் வேர், தக்கோலம், கோஷ்டம், தேவதாரம், மஞ்சள் இவைகள் வகைக்கு இரண்டு வராகனெடை அரைத்துப்போட்டு மூன்றுநாள் வரை உமிக் காந்தலில் வைத்து நாலாநாள் பதமாகக் காய்ச்சி வடித்து அதில் ஒருவேளைக்கு இரண்டுகாசு எடை நெய் வீதம் உட்கொள்ளப் பேய்ச்சொறி தீரும்; இச்சாபத்தியம்.

### சிரங்குக்குப் பொதுவாக மருந்து.

(1) காட்டுச்சீரகம், கார்க்கோலரிசி, கஸ்தூரி மஞ்சள், ஏலம், கடுக்காய், நீர்வெட்டி முத்து, இவைகளைச் சமனெடையாகப் பொடித்து அந்தத்தூளுக் குச் சமன் மிளகுத்தூள் கூட்டி அவற்றை ஊமத்தங்காய்க்குள் அடைத்து ஒன்றரை எருமுட்டையிற் புடம்போட் டெடுத்து ஒருபடி தேங்கா யெண் ணெயில் அரைத்துப்போட்டு மூன்றுநாள் சூரியபுடம் வைத்து அந்த எண் ணெயைச் சிரசின்மேல் தடவிவரச் சிரங்கின் தினவு நமைச்சல் தீரும்.

(2) நீர்வெட்டி முத்தும் சந்தனமும் ஓர் நிறையாக அரைத்துச் சிரங்கில் தடவ அது உதிர்ந்து விடும்.

(3) ஆகாசக்கருடன் (வெங்தோன்றிக்) கிழங்கும், கெந்தகமும் வகைக்குக் கால்பலம் வீதம் அரைத்துக் கால்படி நல்லெண்ணெயில் போட்டுப் பதமாகக் காய்ச்சி வடித்து அதைக் காலேயில் சிரங்கில் பூசிவைத்திருந்து மாலேயில் இலுப்பையரைப்பும், வேப்பிலேயும் சமமாயரைத்து உடம்பில் தேய்த்துக் குளிக்கச் சிரங்குதீரும்.

(4) காத்தொட்டி யிலேச்சாறும் நல்லெண்ணெயும் வகைக்குக் கால் படி வீதம் கலந்து அதில் சுத்திசெய்த கெவுரி ஒரு வராகனெடை பொடித்துப் போட்டுச் சூரியபுடம் வைத்து உடம்பில் தேய்த்து மாலேயில் அரைப்பிட்டுக் குளிக்கச் சிரங்கு தீரும்.

### சிரங்குப் புண்ணுக்குக் களிம்பு.

துருசு, கெந்தகம், குங்கிலியம் இவைகளே ஓர் நிறையாக விளக்கெண்ணெயில் அரைத்துச் சிரங்குப் புண்ணில் போட அது தீரும்.

அ. ச. அருணுசல ரெட்டியார்.

---

### விதை வாய்வு ஒடு வாய்வு முதலியவைகளுக்குக் கைகண்ட மருந்து.

கோழிமுட்டை இரண்டுடன் அரைச்சேர் கொடுக்காய்ப்புளியை புதுமண் பாத்திரத்தில் போட்டு, ஒருபடி சுத்தமான தண்ணீர்விட்டுமூடி அடுப்பில் வைத்து, தண்ணீர் சுண்டும்வரை எரித்து, சுண்டியவுடன் கீழிறக்கிப் பார்த்தால், ஷை முட்டைகள் ஓடுகளில்லாமல் வெந்து தோல்போன்று மேல் சவ்வுள்ளனவாய்க் காணப்படும். அச்சவ்வைப்போக்கி போசனதிகளுக்குமுன் அம் முட்டைகளேச் சுடச்சுடச் சாப்பிடவேண்டியது. ஆறிப்போனபிறகும் சாப்பிடலாம். ஆனல், மேல் சொன்ன கொடுக்காய்ப்புளியின் துவர்ப்பே முட்டையில் சார்ந்திருப்பதால் அவை சாப்பிடத் தெவிட்டும்.

இப்படி மூன்றுநாள், ஆறுவேளே, காலே மாலேகளில் சாப்பிடவும். காலேயில்மட்டும் இம்மருந்தையல்லாது வேறு போசனதிகளேச் சாப்பிடக்கூடாது. மீன், கருவாடு நீக்கி, சைவசாப்பாடாய், 10-அல்லது 11-மணிக்குச் சாப்பிடலாம். இம் மூன்று தினம் ஆறுவேளேயில் பூரா சுகம் கிடைக்காதவர்கள் மறுபடியும் இரண்டு மூன்று வேளே சாப்பிடவும்.

மூன்று அல்லது ஐந்து வயதுமுதல் பனிரண்டு வயது வரையிலுள்ள சிறுவர்களுக்கு மேல்கண்ட அளவில் பாதி கொடுக்கவும். பத்தியமில்லே என்ருலும், க்ஷவரம், எண்ணெய் ஸ்நானம் செய்துகொள்ளும் தினங்களில், மருந்து சாப்பிடக்கூடாது. இம்மருந்து சாப்பிடும் காலங்களில், ஸ்திரீ சேர்க்கையும் கூடாது. இதுவிவரம் அவசியம் தெரிந்து இதனே வாய்வு தொந்தரவுள்ளவர்கள் கையாண்டுவருவது மிக்க நலமாகும் என்று பினங்கைச்சேர்ந்த பிறையிலுள்ள நமது சந்தாநேயர் நா. கா. நாகப்பிள்ளே அறிவிக்கிருர். ப-ர்.

சிவமயம்.

# சைவப் பகுதி.

## 1. சிவம்.

அன்பர்களே! சிவம் என்றசொல், என்றும் உள்ளது; ஒளிமயமானது; ஆணவவலியைக் கெடுத்து அறிவைவளர்ப்பது; ஆன்மாக்களுக்கெல்லாம் உறைவிடமானது; அனைத்தையும் ஆள்வது; அருள் நிறைந்தது; ஆனந்தமுள்ளது; வாக்காலும் மனத்தாலும் அளவிட்டறியப் பெறாதது, (சொல்லிறந்து மனமிறந்து அருளால் அறியத்தக்கது) என்னும் பொருள்களை உணர்த்தி இத்தகைய இலக்கணங்களோடுகூடிய ஒரு ஒப்பற்றபொருளைக்குறிக்கின்றது.

## 2. சிவனடியார்.

சிவனடியாராவார், முற்கூறிய இலக்கணங்களை யுடைய சிவத்தை, அதன் அனந்த கல்யாணகுணங்களில் அநுக்கிரகத்தின் பொருட்டுச் சில முக்கியமான குணங்களாலமைந்த கரசரணாதி அவயவங்களை யுடையதாய்த் தியானித்து அதன் அருளாகிய திருவடியை விரும்பி அதன் அருளாலே வணங்கி வழிபட்டு வருவோர்.

## 3. சிவத்தை அடையும் வழி.

அங்ஙனம் வழிபடுவோரால் சிவத்தை யடைவதற்குரிய வழிகள் படிமுறையாக நான்கு. அவை சரியை கிரியை யோகம் ஞானம் என்பன. அவற்றுள் சரியையாவது சிவபெருமானைப் புறத்தே வழிபடுவது; கிரியையாவது அகத்தும் புறத்துமாக வழிபடுவது; யோகமாவது அகத்தே வழிபடுவது; ஞானமாவது அதன்வழி அடங்கிநிற்பது.

## 4. தருமம்.

மேற்கூறிய வழிகளை யடைதற்பொருட்டு ஆன்மாக்களாற் செய்யப்படும் நல்வினைகள் தருமம் எனப்பெறும். அது பசு தருமம் சிவதருமம் என இருதிறப்படும். பசு தருமமானது ஆன்மாக்களைக் குறித்துச் செய்யப்படும் ஆதுலர்க்கன்னம், ஓதுவார்க்குணவு முதலிய முப்பத்திரண்டு தருமங்களாம்.

## 5. சிவ தருமம்.

சிவதருமமாவது: சிவத்தைக்குறித்துச் செய்யப்படும் தருமங்களாம். சிவ தருமம் பொதுச் சிவதருமம், சிறப்புச் சிவதருமம் என இருதிறப்படும். பொதுச் சிவதருமமாவது சிவதீக்கையின்றிச் சிவபெருமானைக் குறித்துச் செய்யப்பெறும் சரியை கிரியா யோக ஞானங்கள். சிறப்புச் சிவதருமமாவது சிவதீக்கை யுடையோராற் செய்யப்பெறும் சரியை கிரியா யோக ஞானங்கள். இவைகள் அசுத்தாவத்தையிற் செய்யப்பெறும் சிவபுண்ணியங்க ளாகும்.

இவைகளுக்கு வேறாய் சுத்தாவத்தையிற் செய்யப் பெறும் சிவபுண்ணியங்களுண்டு. அவை பத்தாகும். அவையாவன: தத்துவரூபம், தத்துவதரிசனம், தத்துவ சுத்தி, ஆன்மரூபம், ஆன்மதரிசனம், ஆன்மசுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம் என்பனவாம்.

## 6. சைவ சமயத்தின் சிறப்பு.

ஆன்மாக்கள் எண்ணில்லாதவைகள் அனாதியே உண்டு. அவைகளுக்கு இயல்பாகவே இச்சாஞானக் கிரியா வல்லமைகளுண்டு. ஆனால் அவைகள் அநாதியே ஆணவத்தால் தடைபெற்றிருக்கின்றன. ஆதலால் ஆன்மாக்கள் செயலற்று மூடமாய்க் கிடந்தன. ஆன்மாக்களைப்போல் அநாதியா யுள்ளவரும், யாதொன்றாலும் தடைபடாத இச்சாஞானக் கிரியாசத்திகளை யுடையவருமாகிய சிவபெருமான் தமது பேரருளால் அவ்வான்மாக்களுடைய தடையை நீக்கி அவர்களுக்குத் தமது பேரானந்தத்தைக் கொடுக்கத் திருவுளங்கொண்டு அநாதியாயுள்ள மாயையிலிருந்து தமது சத்திகளால் அந்த ஆன்மாக்களுக்குத் தநுகரணபுவன போகங்களைக் கொடுத்தார். அவைகளைப் பெற்ற ஆன்மாக்கள் அவைகளின் உதவியால் தமதறிவிச்சை செயல்கள் முறை முறையாக விளங்கப்பெற்று, சிவத்தை யடையுங்காறும் உறுகின்ற சமயங்கள் பலவுள. அவர்கள் அவற்றைப் புறப்புறம், புறம், அகப்புறம், அகமென நான்காய்த் தொகுத்து, உலோகாயதம் முதல் சிவாத்துவித வாதசைவமீறாக இருபத்து நான்காய் வகுத்தார்கள்.

இங்ஙனம் வகுக்கப்பெற்ற இருபத்து நான்கு சமயங்களும் இவற்றினின்றும் விரிந்த சமயங்களும் கொண்ட கொள்கைக ளெல்லாம் சைவசமயத்திலடங்கியவை. சைவசமயம் கடவுள், ஆன்மா, மலம், மாயை, கன்மம் என்னும் பொருள்களின் இயல்புகளை உள்ளவாறு உள்ளங்கை நெல்லிக்கனிபோல் எடுத்து விளக்கும். ஆதலால் சைவசமயம் சிறப்புடையது.

(தொடரும்) வாலையாநந்தம்.

## விரதப் பகுதி.

### கார்த்திகை தீபம்.

முன் ஒருகாலத்தில் கைலாசபதியினுடைய சமுகத்தில் நெய் விளக்கொன்று மங்கி எரிந்தது. அச்சமயத்தில் ஒரு எலி அந்தத் தீபம் பிரகாசிக்கும்படி தூண்டிற்று. அதைக்கண்ட கைலாசபதி மனமுவந்து அந்த எலிக்குத் தானவதேகமும், திரண்டபாக்கியமும் அநுக்கிரகித்து, அதனை மாபலிச் சக்கிரவர்த்தியாய்ப் பூலோகத்தில் பிறக்க வரமருளினர்.

இவ்விதம் மாறுதேகங்கொண்ட சக்கிரவர்த்தி ஒருநாள் சிவதரிசனம் செய்யப் போனார். ஆங்கு ஆலய பிரதட்சணம் வருகையில் அவ்விடத்தில்

எரிந்துகொண்டிருந்த நெய் விளக்கின் ஒரு திவலை அவர்மீது படவும், தேகாதியந்தம் கொடிய ரணமாயிற்று. இதனுல் மாபலி மிகுந்த கஷ்டமனுபவித்துப் பரமனைத் துதிசெய்து வந்தார்.

ஒருநாள் பரமேஸ்வரர் சக்கிரவர்த்திமேல் மனமிரங்கி "நீ இன்றுமுதல் நூறு பாரம் நெய் இட்டுச் சிவாலயங்களுக்குத் தீபம் ஏற்றுவையாகில் இரணம் மாறி ஸ்வஸ்தம் பெறுவதுமல்லாமல் சாம்ராஜ்யமும் எய்துவாய்" என்று அசரீரி வசனம் மொழிந்தருளினர். இது செவியுற்ற மாபலி பிர்ம்மானந்தங் கொண்டு, ஈஸ்வர ஆக்ஞைப்பிரகாரம் நெய்த்தீபமேற்றி வருகையில், பரமேஸ்வரர் கார்த்திகைமீ பூர்வபக்ஷம் கார்த்திகை நக்ஷத்திரத்தில் அகண்ட பரிபூரண திவ்ய தேஜோமய சின்மயானந்தராய் சக்கரவர்த்திக்குத் தரிசனந் தந்து சாயுஜ்ய பதவியளித்தனர்.

அப்பொழுது ஆலயத்திற்கு ஈஸ்வரரைத் தெரிசிக்க வந்திருந்த தேவரெல்லாம் பரமேஸ்வரரது ஜோதிப் பிரபையைக்கண்டு பயந்து, துதிபுரிந்து, பொரி, அவல் நிவேதனம் செய்தார்கள்.

இதற்கறிகுறியாக கார்த்திகைமீ பூர்வபக்ஷம், கார்த்திகை நக்ஷத்திரத்தில் மனிதர் தீபம் வைக்கவும், சுட்கப்பனை கட்டவும் (சொக்கப்பானை) ஆகமங்களில் விதி சொல்லப்பட்டிருக்கிறது.

மலையைச்சார்ந்த ஸ்தலங்களில் நக்ஷத்திரம் முக்கியமாகவும், சமுத்திரஞ் சேர்ந்த ஸ்தலங்களில் பவுர்ணமி பிரதானமாகவும் தீபம் வைப்பது ஆகமத் துணிபு.

இவ்வருஷம் கார்த்திகைமீ 4உ (19-11-26) வெள்ளிக்கிழமை அண்ணமலையார் தீபம், அனுஷாகார்த்திகை வருகிறது.

ச. விஸ்வநாதன், திருவானைக்கா.

## விநோதப் பகுதி.

இப்போது, நாகரிக விருத்திக்குத் தகுந்தபடி, காப்பி ஹோட்டல்களில் பலகார வகைகள்: சூரத்துக்காரி, பம்பாய்க்காரி, டில்லிதர்பார், மைசூர்வடை, பம்பாய்வடை, வெங்காயவடை, அரைக்கீரைவடை, மிளகுவடை, காசி அல்வா, பம்பாய் அல்வா, தம்ரூட் அல்வா, உருளைக்கிழங்கு போண்டா, மைசூர் போண்டா, தயிர் போண்டா, வாங்கிபாத், மைசூர் உப்புமா, அவல் கிச்சடி முதலிய பல பெயர்களுடன் வெளிவருவது நமக்கு மிகுந்த ஆனந்தத்தைத் தருகின்றது. இவற்றுடன் இலுப்பைக்கட்டித்தூள் கிச்சடி ஒன்று செய்து ஏன் கலந்துகொள்ளக்கூடாது என்று நாகரிக வாலிப சங்கத்தார் காப்பி ஹோட்டல்காரர்களை ஒரு கேள்வி கேட்டிருக்கிருர்களாம்.

* * * * * *

புத்தகங்களையும், வியாசங்களையும் விரைவில் எழுதி முடிப்பதற்கு நூதனக் கல்விகற்றோர் குறுக்கு வழியொன்று கண்டுபிடித்திருக்கிருர்களாம். அஃதென்னவெனில், எழுதும் அன்பர்கள், எழுத்துப்பிழை, இலக்கணப் பிழை முதலியவற்றைக் கவனியாமல் பேனுவைக் கடுதாசியில் விரைவாக ஓட்டிவிட்டால் எதுவும் சீக்கிரத்தில் முடிந்துவிடுமாம்.

பிறர்செய்த நூல்களேயும், எழுதிய கட்டுரைகளேயும் அப்படியே காப்பி யடித்து வெளியிடுவோர், கஷ்டமின்றி நூலாசிரியர் என்ற பட்டத்தையும், பத்திராசிரியர் என்ற பட்டத்தையும் தரித்துக்கொள்ளலாமென்று, கல்வி மடத்தார் ஓர் உபாயத்தை ஜனோபகாரமாக வெளியிட்டிருக்கிறார்களாம்.

* * * * * *

தீபாவளியிலும், கிருத்திகை தீபத்திலும் குறைந்தது பத்து ரூபாய்க்காவது டப்பாஸ் கொளுத்துவதில் செலவிடாதவர்க்குக் கௌரவமே யில்லேயென்று இடம்ப சொஸைட்டியார் ஒரு தீர்மானம் செய்திருக்கிறார்கள்.

* * * * * *

முறைப்படி கற்றோரால் எழுதப்படும் விஷயங்களைப் பார்த்தவுடன், "உபயோகமற்றவை" யென்று சொல்வதும், கல்வி நிரம்புதலில்லாதவர்களால் எழுதப்படும் ஆபாச வழுவுரைகளேக் கண்டவுடன், "ஆகா ! என்ன அருமை ! என்ன அருமை !!" என்று ஆனந்தித்துப் பேசுவதும் செய்யாதவன் தற்காலத்துக்குத் தகுந்த நூதன விவேகி யாகமாட்டான் என்று போலி விவேக சங்கத்தார் அபிப்பிராயப்படுகிறார்களாம்.

* * * * * *

சிகரெட் இறக்குமதி போதாதபடியால் பல வாலிபர்கள் நெஞ்சுலர்ந்து போகிறார்கள்; ஆதலின், மாதந்தோறும் இன்னும் நான்கு கப்பல் சிகரெட் இறக்குமதிக்கு ஏற்பாடு செய்யவேண்டுமென்று உதட்டுவெள்ளேச் சங்கத்தார் ஒரு தீர்மானங் கொண்டுவந்திருக்கிறார்களாம்.



## உலகாநுபவக் குறிப்புக்கள்.

உலகோர், ஒருவன் அதிகச் செலவு செய்தானேயானல் அவனேத் தடபுடல் பேர்வழி யென்பார்கள். செலவு செய்யாமலிருந்தாலோ லோபி-கருமி-என்று தூற்றுவார்கள். ஆதலால் நாம் உலகோரைத் திருப்திசெய்வது கடினம். 'உலகம் பலவிதம்' என்றெண்ணி யார் என்ன குற்றம்-குறை-சொல்லிடினும் அவைகளுக்காக மனம் நையாது தத்தமது நோக்கத்திற்கிணங்கவே சன்மார்க்கத்தில்-நியாயமான செய்கையில்-தலேயிடுவது நன்று.

*** *** *** ***

மனிதர் ஒவ்வொருவரும் ஒவ்வொரு நியாயத்தை-உண்மையை-மனத்திலிருத்தியே வார்த்தையாடுவார்கள்; தர்க்கிப்பார்கள். அப்பேர்ப்பட்டவர்களின் வார்த்தையை நன்காராய்ந்து பதிலுரைக்கவேண்டும். அங்ஙனமின்றிச் சிலர் மந்தமதியினல் ஒருவர் பேசும் உண்மை வசனத்தின் அருமைதெரியாது "பேசுபவர் அறிவிலாதவர்; பைத்தியக்காரர்" என்று முன் பின் ஆராயாது அவசரப்பட்டு வார்த்தைகளே மடமடவென்று கொட்டிவிடுவது வழக்கம். இதனல் இவர்கள் அடையும் பயனென்ன? இவர்கள் அறிவின்றித் தூஷித்த மொழிகளேத் தாங்களே அடையப் பெறுகிறார்கள். மேலும் பலராலும் இகழப்படுகிறார்கள். இது நவீன நாகரீகம் புகுந்து விளேயாடும் இக்காலத்தில் மிகவும் சர்வ சாதாரணமன்றோ ?

இக்காலத்தில், சிறுவர்கள் பெற்றோர்களுக்குப் புத்தி கற்பிக்கின்றனர். இது பெரும்பாலும் ஆங்கிலங்கற்ற சிறுவர்களுக்கும், அஃது இல்லாத பெற்றோர்களுக்கு மிடையிலேயே விசேஷமாகக் காணப்படுகிறது. தற்காலத்தில் பெரும்பாலான விஷயங்கள் - காரியங்கள் - தலைகீழ்ப்பாடமாக மாற்றப்பட்டிருப்பதுபோல் இதுவும் நவீன நாகரீகத்தில் சிக்குண்டு சீர்திருத்தத் துறையிலும் சென்றது எத்துணை ஆச்சரியம் !—என்னே நாகரீகம் !

* * *        * * *        * * *        * * *

உனக்குப் பலர் பலவித புத்திமதிகளைக் கூறுகின்றனர். அவைகளையெல்லாம் நீ உன் மனதில் வாங்கி அவைகளின்படியே நடப்பதென்றால் அசாத்தியமான காரியம். ஒவ்வொரு மனமும் ஒவ்வொரு அபிப்பிராயபேதமுடையது என்பதை நீ முதலில் உணரவேண்டும். அப்பொழுதுதான் நீ பலருடைய அபிப்பிராயங்களை-புத்திமதிகளைக்-கேட்பது மூடத்தனமாகுமென்பதை அறியமுடியும். நீ செய்யப்போகும்-செய்யும்-காரியங்களுக்குச் சிலர் கூறும் அபிப்பிராயபேதம் உன் மனதை ஒரு சமயம் எவ்வளவோ விசனத்திற்கு-சஞ்சலத்திற்கு-உள்ளாக்கிவிடும். அப்பொழுது உன் காரியங்களும் அடியோடு கெட்டுப்போகிறது. வீண் துயரம்-கலக்கம் - அங்கலாய்ப்பு-அதினின்றும் ஏற்பட மார்க்கமுண்டாகிறது. இதுபோலவே நீ செய்யும்-செய்யப்போகும்-காரியங்களை எவரிடமும் அறிவிக்காமல், அவர்கள் அபிப்பிராயத்தைத் தெரிந்துகொள்ளாமல் செய்யும் காரியம் இடர்ப்பட்டழியும். ஆகவே, உன்மனதிற்குகந்த-அறிவுடைய-புத்திசாலியின் யோசனையைக் கேட்டு, உன் அனுபவத்திற்கும் பொருத்தமான காரியங்களில் பிரவேசிப்பது நலத்தையளிக்கும்.

தி. சி. குழந்தைவேலன்.




## அம்பாலிகை அல்லது அதிசய மரணம்

(189-ம் பக்கத் தொடர்ச்சி.)

### 16-வது அத்தியாயம்.

**நா**ம் முன் கூறியபடி ஆனந்தலிங் பொழுதமருமட்டும் கறுப்பண்ணன் வருகிறானா வென்று, வருகிறவண்டிகளை யெல்லாம் பார்த்துக்கொண்டிருந்தான். கடைசியில் நகரத்திலிருந்து புறப்படும் படகு அங்குவந்து விட்டது. அதுகாறும் கறுப்பண்ணன் காணப்படவேயில்லை. அக்கள்ளப்பயல் வண்டியிலேனும், இரயிலிலேனும், கடைசியில் படகிலேனும் ஏன்வரவில்லையென்பது ஆனந்தலிங்குக்குச் சற்றும் புலப்படவில்லை. கடைசியில் தான்படகேறி அமிர்தம்மாள் வீட்டிற்கு வரும்போது இருள்சூழ்ந்து விட்டது.

ஆனந்தலிங் அமிர்தம்மாள் வீட்டில் நுழைந்து குதிரைலாயங்கள் இருக்கும் வழியாய்ச்செல்லும்போது, தான் எதிர்பார்த்துக்கொண்டிருந்த மனிதன் எப்படியோ தன் கண்களுக்குப்புலப்படாமல் தனக்குமுன்னேயே அங்குவந்துவிட்டானென்பது தெரிந்தது.

அங்கு ஒருவண்டி வந்திருந்தது. அதில் நான்குபேர் வந்திருந்தார்கள். ஆனந்தலிங் கறுப்பண்ணனுடைய உயரமான உருவத்தைத் தெரிந்துகொண்

டான். "ஆகா! இவன் முடிவான யுத்தத்திற்கு ஆயத்தமாய் வந்திருக்கிறான்" என்று ஆனந்தஸிங் தனக்குத்தானே கூறிக்கொண்டான். அவர்கள் சற்று முன்பேவந்தார்க ளென்பது தோன்றியது.

கறுப்பண்ணன் சாம்பாசாம்பா வென்று பன்முறை கூவியும் ஒருவரும் வாராததால் குதிரைகளை யவர்களே லாயத்தில் கட்டினார்கள். ஆனந்தஸிங் இரண்டு நிமிடங்களில் தன் உருவத்தை மாற்றிப் பழைய நாடோடிபோல் மாறுவேடமணிந்து கறுப்பண்ணன் முதலியவர்கட்கு முன்பாகவே வீட்டிற்குள் நுழைந்தான்.

சற்று நேரங்கழித்து நவீனபுரியிலிருந்து வந்தவர்கள் வீட்டிற்குள் நுழைந்தார்கள். அப்போது ஆனந்தஸிங் வீட்டின் ஓரத்திலிருந்தசெடிகளில் மறைந்து கொண்டிருந்தான். உள்ளே சென்றவர்கள் சில நிமிடங்களுக்குள் தாழ்வாரத்திற்கு வந்துவிட்டார்கள். கறுப்பண்ணன் மற்றவர்களை நோக்கி "இந்த இரண்டுஸ்திரீகளும் எங்கே சென்றிருப்பார்கள் ?" என்றான்.

மற்றொருவன் "வீடேயடியோடு காலி செய்யப்பட்டதுபோ லிருக்கிறதே" என்றான். இன்னொருவன் "அவர்களிருவரும் ஓடிவிட்டார்க ளென்றே நினைக்கிறேன்" என்றான். கறுப்பண்ணன் "அடகடவுளே ! அவள் எழுதிய தந்தியில் குறித்த 'அவன்' என்றதை நான் தவறாய் எண்ணிக் கொண்டேனே!" என்றான்.

அதைக்கேட்ட ஆனந்தஸிங் "அமிர்தம்மாள் எழுதிய தந்தியில் பெயரைக்குறிக்காது இவன் விவகாரங்களுக்கு விரோதியாகிய ஒருவன் வந்திருக்கிறானென்று மட்டும் குறிப்பாய் எழுதியிருந்தாள்" என்று ஊகித்துக் கொண்டான்.

கறுப்பண்ணன் 'அவன்' என்றவார்த்தையை உறுத்திக் கூறியபடியால் அவன் நண்பர்களில் ஒருவன் அவனைநோக்கி "'அவன்' என்றால் நீயாரைக் குறிக்கிறதென்று எண்ணிக் கொண்டாய் ?" என்றான்.

கறுப்ப:—நான் தவறாகவே எண்ணிக் கொண்டே னென்பது நன்றாய்த்தெரிகிறது. முதலிலிருந்து எனக்குவிரோதியாய்த் தொந்தரவு கொடுத்துக் கொண்டிருக்கும் அந்தக் கள்ளப்பயல் தான் எப்படியோ இந்த இடத்தைத் தெரிந்துகொண்டு இங்குவந்திருக்க வேண்டுமென்பது இப்போது அய்யமின்றித் தெரிகிறது.

மற்றவன்:—"துப்பறிபவனாகிய ஆனந்த ஸிங்கையா கூறுகிறாய்?" என்றான். கறுப்பண்ணன் 'ஆம்' என்றான்.

மற்றவன்:—சரி இங்கு வந்தவன் அவனாயிருந்தால் இந்த மாதர்கள் காணாம லிருப்பதற்குக் காரணம் விளங்கிவிட்ட மாதிரியே.

கறுப்ப:—இல்லை. அவனே வந்திருந்தாலும், அமிர்தம்மாள் எனக்கு ஏதாவது சமாசாரம் வைத்துப்போ யிருக்கவேண்டும்.

அம்பாலிகையும் அமிர்தம்மாளும் காணாம லிருப்பதைப்பற்றிக்கறுப்பண்ணன் முதலியவர்கள் எப்படி வியப்படைந்து விழிக்கிறார்களோ அவ்வாறே தான் ஆனந்தஸிங்கும் வியப்படைந் திருக்கிறான்.

அம்மாதர்கள் ஓடிப்போய் விட்ட மர்மம் இன்னதென்று ஒருவர்க்கும் விளங்கவில்லை. அமிர்தம்மாள் ஓடிவிட்டதற்காக வாவது அவனுக்குக் காரணம் தோன்றுகிறது. அம்பாலிகை யென்ன காரணத்திற்காக அவள்கூடச் சென்றாள் என்பது சற்றேனும் அவனுக்கு விளங்கவில்லை.

ஒன்றுமட்டும் அவன் மனதிற்றோன்றியது: இரண்டு மாதர்களும் கலந்து

பேசிக்கொண் டிருப்பார்கள்; அமிர்தம்மாள் துப்பறிபவன் கூறியவெல்லாம் பொய்யென்று அம்பாலிகைக்குக் கூறிவிட்டிருப்பாள் என்று அவனுக்குப் புலப்பட்டது.

இன்னது செய்வதென்று ஆனந்தஸிங்குக்குத் தோன்றவில்லை. முதலில் கறுப்பண்ணனை யெதிர்ப்பதென்று தீர்மானித்தான். பிறகு "அப்படிச் செய் யலாகாது; ஒருசமயம் கறுப்பண்ணன் அம்மாதர்கள் போயிருக்கு மிடத்தைக் கண்டறிவான். ஆகையால் இவன்மேல் கண்வைத்திருந்தால் நாம் அந்த விடத்தைச் சீக்கிரமா யறிந்துகொள்ளலாம்" என்று தீர்மானித்துக் கொண் டான்.

ஆனல் அச்சமயம் நேர்ந்த திடுக்கிடத்தக்க சம்பவத்தால் அவன் ஏற்பாடு களனைத்தும் மாறிவிட்டன.

கறுப்பண்ணன் கூடவந்தவர்களில் ஒருவன் இம்மாதர் சென்றதைப்பற்றி யேதாவது உளவு அகப்படுகிறதா பார்ப்போமென்று வீடுமுழுதும்சோதனை செய்தான். அவர்கள் மிக்க அவசரத்தோடு அங்கிருந்து புறப்பட்டார்கள் என்பதற்குத்தக்க அத்தாக்ஷிக ளகப்பட்டன. வீட்டிலிருந்த சாமான்கள் யாவும் அப்படி யப்படியே விடப்பட்டிருப்பதை நோக்க அவர்களைத் திடீ லென்று பயப்படுத்தித் துரத்திவிடத்தக்க சம்பவம் ஏதோநேர்ந்தது போல் தோன்றியது.

நாம் முன் கூறியபடி ஒரு அதிசய சம்பவம்நேர்ந்தது. உளவுக்காகத் தேடிக்கொண்டிருந்த அம்மனிதன் இரத்தக் கறைகளைக் கண்டான். அவ் வாறு இரத்தக்கறையைக் கண்ட அம்மனிதன் வீறிட்டலறிக்கொண்டு தாழ் வாரத்தி லிருக்கும் கறுப்பண்ணன் முதலியவர்களிடம் சென்று தான் இரத் தக்கறையைக் கண்ட அதிசயத்தைக் கூறினன்.

(தொடரும்) ஆரணி-குப்புசாமி முதலியார்.

---

## நடுவெழுத்து விஞு விடை.

தேவகோட்டை-பிரம்மஸ்ரீ, சி. தெ. சுந்தரராஜையங்காரவர்கள், நடுவெ ழுத்து விஞவொன்றெழுதி, அதற்குரிய விடையையும் எழுதி அவற்றையும், ஒரு ரூபாயையும் நமக்கனுப்பி, அந்த விஞவை ஆனந்தபோதினியில் பிரசுரித் துத் தாங்கள் குறிப்பிட்ட விடையையே முதலில் எழுதுவோர்க்கு, தாங்கள் அனுப்பிய ஒரு ரூபாய்க்கும் ஒரு வருஷத்துக்கு ஆனந்தபோதினி அனுப்பி வரும்படி நமக்குத் தெரிவித்திருந்தார்கள். அவ்வாறே அவ்விஞவை, சென்ற ஐப்பசிமீ சஞ்சிகை 189-ஆம் பக்கத்தில் வெளிப்படுத்தியிருந்தோம். ஷை ஐயங்காரவர்கள் தெரிவித்திருந்த விஞவும் விடையும்:

1. உலகத்தின் பெயர் ... ஜ க ம்
2. துர்க்கையின் பெயர் ... கொ ற் றி
3. வருஷங்களி லொன்றின் பெயர் ... வி ப வ
4. நக்ஷத்திரங்களி லொன்றின் பெயர் ... ம க ம்
5. மாதங்களிலொன்றின் பெயர் ... கார் த் திகை
6. கிரகங்களிலொன்றின் பெயர் ... பு த ன்
7. விஷ்ணுஸ்தலமொன்றின் பெயர் திருவண்பு ரு டோத்தமம்

என்பவைகளே. இந்த விடைப் பெயர்களின் நடுவில் அமைந்த எழுத்துக்க ளால் வரும் "கற்பகத்தரு" என்பதே அவர் குறிப்பிட்ட மரத்தின் பெயராம். இவற்றில் ஒன்றேனும் மாறுபடாமல் விடை யெழுதினவர்கள் :—1. காவேரிப்

பாக்கம்-R. மோஹனம் நாயகர், 2. விருதுநகர்-S. கணபதி ஐயர், 3. சத்திய விஜயநகரம்-மு. தேவராஜு முதலியார், 4. ஜெயங்கொண்டநாதர் கோவில்-K. P. இராமச்சந்திர ஐயர், 5. கும்பகோணம்-கோவிந்தசாமி, 6. நல்லாண் பிள்ளைப் பெற்றாள்-P. இரத்தின முதலியார் என்னும் ஆறு பேர்களுமே. இவர்களுள் முதலில் எழுதினவர் காவேரிப்பாக்கம்-R. மோஹனம் நாயகர் என்பவரே யாதலின், பத்திரிகையில் தெரிவித்தபடி அவருக்கே ஒரு வருஷம் ஆனந்தபோதினிச் சஞ்சிகைகளை அனுப்ப ஏற்பாடுசெய்து இவ்வருஷம் ஆடி முதல் கார்த்திகை வரையுள்ள சஞ்சிகைகளை அனுப்பி யிருக்கிறோம். இந்த ஒரு வருஷ முடிவாகிய அடுத்த பிரபவா ஆனிமீ வரை இனி மற்ற சஞ்சிகை களும் அனுப்பிவரப்படும்.

வேறு பதங்களால் நடு வெழுத்துக்கள், 'கற்பகத்தரு' என்று அமையும் படி நூற்றுக்கு மேற்பட்ட பல நண்பர்கள் விடைகள் எழுதியிருக்கின்றார்கள். அவை ஐயங்காரவர்கள் குறிப்பிட்டதற்கு நேராயில்லாவிடினும் விடைக்குப் பொருத்தமானவைகளே; ஆதலின் அவைகளும் வியத்தற்பாலனவே. எனி னும் அத்தகைய நண்பர்கள் அநேகர் ஆதலின் விரிவஞ்சி அவர்களின் பெயர் கள் குறிப்பிடப்படவில்லை.

**இப்போது நாம் பிரசுரித்தபடி இதனைச் செய்துவிட்டோம். இனி இத் தகைய வினாக்கள் பிரசுரிக்க நேர்ந்தால் சரியான விடை யெழுதுவோரின் பெயர்களை யெல்லாம் எழுதி லாட்டரி போட்டு அதில் பிரைஸ் வந்தவர் களுக்கே பரிசு கொடுக்கப்படும். ப-ர்.**

---

## ஆனந்தபோதினியின் 12-வது வருட வாழ்த்து.

ஆனந்தத் தமிழணங்கி னருந்தவத்தா லவனிமிசை
யன்பாய்த் தோன்றி
ஆனந்தத் தமிழ்செறியுந் திருமேனி யொடுமொந்த
ரகத்திற் சேர்ந்து
ஆனந்தத் தமிழ்புகட்டி யறிவுறுத்தி யாசார
மனைத்துங் காட்டும்
ஆனந்த போதினிநின் றரிசனமே யென்றும்ஆ
னந்த மாமே. (1)

கருணைமுகில் பொழிமழையே பூர்வீகத் தமிழ்த்தேனே
கவிவல் லோர்தம்
இருதயத்தி னீங்காத பேரின்பச் சுவைக்கனியே
யிருடீர் சோதி
விரிஞானச் சூரியனே மதிதோறும் வந்தமிழ்தின்
மேலாம் புத்தி
தருநீதப் பொருண்மணியே நினையடைந்தோர்க் கின்னலுண்டோ
தரணி மீதே. (2)

மன்னே வருக வழகுயர்ந்த வடிவே வருக வளர்ச்சிபெறும்
பொன்னே வருக வன்புதயை பொறுமை யிரக்கம் புதினமெலாந்
தன்னே ரிலாம லுணர்த்தவந்த தருவே வருக தமிழ்நாட்டி
லெந்நா ளினும்பே ரானந்த மிலகும் பொருணீ வாழியவே. (3)

ச. சி. இராமய்யா, 12970 நெ. சந்தாதாரரின் குமாரன்,
கடலாடி.

# வர்த்தமானக் குறிப்பு.

**மணிகாட்டும் விசித்திரத் தொப்பி:**—தலையிலணியும் வைக்கோல் தொப்பியில் கடிகாரம் வைத்துக்கொள்வதற்கான வேலைப்பாடு லண்டனில் இப்போது செய்யப்பட் டிருக்கிறது. அக்கடிகாரமுள்ள தொப்பியைத் தலையி லணிந்து கொண்டு வெளியே போகலாமாம். அவ்வாறு அணிந்து கொள்ளுவோர்க்கும் பிறர்க்கும் அக்கடிகாரம் மணிகாட்டுவதில் பயன் படுகிறதாம்; மணியும் பிசகில்லாமலும் திருப்திகரமாகவும் ஓடுகின்றதாம். இத்தொப்பியுள்ளார் கைக்கடிகாரத்தைப் பார்க்கவேண்டிய அவசியமே இல்லையாம்.

* * * * *

**வெளிச்சத்தால் மின்சாரம்:**—வாஷிங்கட்டனை யடுத்த யு. யஸ். ப்யூரோ ஆப் ஸ்டான்டேர்ட்ஸில் ஒருவித ஸ்படிகக்கல் இருக்கின்றது. அதைப் பரீட்சித்துப் பார்த்ததில் அக் கல்லின்மீது வெளிச்சம் தாக்கினால் உடனே மின்சாரவேகம் உற்பத்தியாகின்றதாம். இப்போது அச்சக்தி குறைவான நிலையிலிருக்கிற தென்பதும், அதைப் பிரபலமடையச் செய்தால் உலக சரித்திரத்திற்கே மாறுதல் ஏற்படுமென்பதும் தெரிகின்றன. ஆகாய விமானம், தந்தி, டெலிபோன், நீராவியின் உபயோகம் என்பவற்றை விட அச்சக்தி யதிகரித்துப் பெரியமாறுதல் ஏற்படும். அதாவது ஏராளமான சூரியகாந்தியைக் கொண்டு சக்கரத்தைச் சுழலச்செய்து, உலகத்திலுள்ள சகல வேலைகளையும் நடத்தமுடியுமாம். இது தற்கால சாஸ்திர ஆராய்ச்சியில் மிகவும் வியக்கத்தக்கதே.

* * * * * *

**சாஸ்திர ஆராய்ச்சியின் முன்னேற்றத்தில் இந்தியாவின் மேம்பாடு :—** செடி கொடிகளுக்கும் பிராணிகளுக் கிருப்பது போலவே ஜீவாதாரமான கருவிகள் அமைந்து அனேக விதங்களில் ஒத்திருக்கின்றன வென்பது இந்திய ஆராய்ச்சி வல்லோரால் கண்டு பிடிக்கப்பட்டு ஸ்தாபனஞ் செய்யப்பட்டது. இதை நிரூபித்த இந்தியர் ஸர். ஜெகதீஸ் சந்த்ரபோஸ். பிரிடிஷ் அஸோஸியேஷனில் கூடிய முதன்மையாளரான ஐந்து தேக தர்ம சாஸ்திரிகளும், ஜீவ நிர்ணய சாஸ்திரிகளும் இவரைப் புகழ்ந்து கொண்டாடினார்கள். ஸர் போஸ் மிகவும் நுட்பமாகவும் ஆச்சரியகரமாகவும் கண்டுபிடித்த இவ்விஷயம் உலகமெங்கும் பரவிற்று. இவருடைய சாஸ்திர ஆராய்ச்சி சாலையாகிய போஸ் இன்ஸ்டிட்யூட் என்பது தத்துவ ஆராய்ச்சிக்கு நடுநாயகமாய் விளங்கி இந்தியாவைப் பெருமைப்படுத்துகிறது.

* * * * * *

**குழந்தை வயிற்றில் குழந்தை:**—கயாவில் நான்குமாதக் குழந்தை ஒன்றுக்கு வயிற்றில் ஏதோ கோளாறு ஏற்பட்டதால் அது ஆஸ்பத்திரியில் சேர்த்துக் கொள்ளப்பட்டது. அதற்கு வயிறு அதிகமாக வீங்கியிருந்ததால் ஸர்ஜன் ஆபரேஷன் நடத்தினர். வயிற்றிற்குள் இன்னொரு சிறிய குழந்தையின் பிரேதம் காணப்பட்டது. அதற்கு இரண்டு கைகளும் ஒரு காலும்தான் இல்லை. இவ்விஷயம் நகரத்தில் காட்டுத் தீபோல் பரவிவிட்டது. ஆயிரக் கணக்கான ஜனங்கள் இந்த அதிசயத்தைப் பார்க்கவந்து கூடிவிட்டனர். வேடிக்கை பார்க்கவந்தவர்களிடம் ஆஸ்பத்திரி அதிகாரிகள் தலைக்கு ஒரு அணு வீதம் பணம் வசூலித்தனர். சிறிய பிரேதம் ஒரு புட்டியில் வைக்கப்பட்டிருக்கிறது. இதைப் பிரஸவித்த பெரியகுழந்தை உயிருடனிருக்கிறது.

இதற்குக் காரணம், வயிற்றில் இரட்டைக் குழந்தைகள் இருந்து ஏதோ கோளாறால் ஒன்றிற்குள் மற்றொன்று புகுந்திருக்க வேண்டுமென்று கூறப்படுகிறது.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

**அக்ஷய௵ மார்கழி௴—கலியுகாதி 5028, சாலிவாகனம் 1849,**
**பசலி 1336—கோல்லமாண்டு 1102—ஹிஜரி 1345,**
**இங்கிலீஷ் 1926௵ டிசம்பர்௴—1927௵ ஜனவரி௴**

| மார்கழி௴ | டிசம்பர் / ஜனவரி௴ | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | வியா | து21-48 | ப※28-55 | சி28-55ம | கிருத்திகை |
| 2 | 17 | வெ | திர17-53 | கிரு26-53 | சி26-53ம | அநுமத்விரதம் |
| 3 | 18 | சனி | சது14-55 | ரோ25-35 | அ25-35சி | பௌர்ணமி, சந்திரபூஜா |
| 4 | 19 | ஞா | ○12-53 | மிரு25-28 | சித்60 | நடராஜர் அபிஷேகம் |
| 5 | 20 | திங் | பிர12-25 | திரு26-38 | சி26-38அ | ஆருத்திராதரிசனம் |
| 6 | 21 | செவ் | துதி13-18 | புன29-15 | சித்60 | கரிநாள் [ண |
| 7 | 22 | புத | திரி15-38 | பூச33-18 | சித்60 | வியாதியஸ்தர் மருந்துண் |
| 8 | 23 | வியா | சது19-28 | ஆயி38-48 | சி38-48அ | நவக்கிரக சாந்திசெய்ய |
| 9 | 24 | வெ | பஞ்21-55 | மக45-13 | ம45-13சி | கரிநாள் |
| 10 | 25 | சனி | சஷ்30-23 | பூர53-43 | சி53-43ம | வியாதியஸ்தர் குளிக்க |
| 11 | 26 | ஞா | சப்36-43 | உத்59-45 | அமி60 | கரிநாள், திஸ்ரோஷ்டகா |
| 12 | 27 | திங் | அ42-48 | அஸ்60-0 | சித்60 | காளபைரவாஷ்டமி |
| 13 | 28 | செவ் | நவ48-8 | அஸ்6-48 | சித்60 | கர்ப்போட்ட ஆரம்பம் 28-20 |
| 14 | 29 | புத | தச52-13 | சித்12-50 | சித்60 | தானியம் செலவிட |
| 15 | 30 | வியா | ஏ54-43 | சுவா17-38 | அ17-38சி | சர்வமத்வ ஏகாதசி |
| 16 | 31 | வெ | து55-35 | விசா20-50 | சித்60 | கதிரறுக்க, கோடியுடுக்க |
| 17 | 1 | சனி | திர54-38 | அனு22-23 | சித்60 | தானியம் களஞ்சியம் வை |
| 18 | 2 | ஞா | சது52-5 | கேட்22-10 | ம22-10அ | மகாசிவராத்திரி [க்க |
| 19 | 3 | திங் | ●48-25 | மூல20-33 | சி20-33ம | சர்வத்ர அமாவாசை |
| 20 | 4 | செ | பிர43-18 | பூரா17-43 | சி17-43அ | |
| 21 | 5 | புத | துதி37-25 | உத்13-55 | அ13-55சி | |
| 22 | 6 | வியா | திரி31-8 | திரு9-33 | சித்60 | |
| 23 | 7 | வெ | சது22-5 | அவி4-48 சதை59-58 | சித்60 | |
| 24 | 8 | சனி | பஞ்18-13 | பூரட்55-30 | ம55-30சி | |
| 25 | 9 | ஞா | சஷ்12-10 | உத்51-33 | அமி60 | |
| 26 | 10 | திங் | சப்6-35 | ரேவ48-10 | சித்60 | |
| 27 | 11 | செவ் | அ1-45 நவ57-43 | அஸ்45-35 | சித்60 | |
| 28 | 12 | புத | தச54-25 | பர43-48 | சி43-48அ | மூலிகை உபயோகிக்க, ஆயுதம் பயிற்ற, அடுப்பு வைக்க |
| 29 | 13 | வியா | ஏ52-8 | *42-55 | மர60 | கிருத்திகை, சில விடங்களில் வைகுண்ட ஏகாதசி, போகிபண்டிகை |

| | | | |
|---|---|---|---|
| | செ | | ராகு |
| குரு | 16உ தனு-பு<br>19 ,, மக-சுக் | | |
| சூ-சு கே | சனி புத | | |

**PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,**
**AT THE "ANANDA BODHINI" POWER PRESS,**
**15, VENKATESA MAISTRY ST., MADRAS.**